## சினிமா நட்சத்திரங்களைப் போல, நீங்களும் உங்கள் சருமத்தைக் காப்பாற்றுங்கள்!

# சோபனா சமர்த்

சோபனா பிரதி தினமும் கையாளும் ஒரு அழகிய வழக்கம் இதுதான். காலையிலும் மாலையிலும் அவர் தன் சருமத்தில் லக்ஸ் டாய்லட் சோப்பின் நுரையைத் தடவி, பிறகு சுத்த ஜலத்தில் அலம்புகிறார். ''என் சருமத்தை அழகாகவும், பளிச்சென்றும், தூய்மையாகவும், வைத்துக்கொள்ள நான் தவறாமல் செய்யும் முறை இதுதான்'' என்று அவர் சொல்லுகிறார். இன்னும் அநேக சினிமா நட்சத்திரங்களும் அப்படியேதான் சொல்லுகிறார்கள்.




## லக்ஸ் டாய்லட் ஸோப்

LEVER BROTHERS (INDIA) LIMITED

உலகின் ஒப்பற்ற தீரர்களாலும் விடுவிக்க முடியாத
புனித வனிதாமணியின் — உன்னதக் கதை



★

நியூ ஹன்ஸாரின்

# திரௌபதி

★

சுசிலா ராணி

மற்றும்

★ சந்திரமோஹன் ★ மஸார் கான்
★ டேவிட் ★ கே. என். சிங்
★ ராம்கோபால் (புகழ்பெற்ற நாட்டியக்காரர்)

நடிப்பது

★

டைரக்ஷன்: பாபுராவ் படேல்

★

## சென்னை ஸ்டாரிலும்
## திருச்சி கெயிட்டியிலும்

மகத்தான 2-வது வாரமாக நடைபெறுகிறது

ஸ்ரீநிவாஸ் பிக்சர்ஸ் சர்க்யூட்டாரின் வெளியீடு



# கைத்தொழில் மூலம் சட்டதிட்டமான அபிவிருத்தி

பேநாடுகளுக்கிடையில் சம அந்தஸ்துடன் தனக்குரிய ஸ்தானத்திலமர இந்தியா விவசாயத்தைப் புறக்கணிக்காமல் கைத்தொழில் விஷயத்தில் தனது மோசமான நிலைமையை சீக்கிரம் சமாளித்துக் கொள்ளுதல் மிக அவசியமாகும். கைத்தொழில், விவசாயம் இரண்டையும் சரியாக இணைத்துக் கொண்டு செல்வதிலேயே நாட்டின் உண்மை அபிவிருத்தி இடப்பது.

அது காரணமே ஜே. கே. தொழிற் ஸ்தாபனங்கள் இன்று ஓர் கைத்தொழிலபிவிருத்தி சட்ட திட்டத்தில் முனைந்து வேலை செய்து வருவது. அத் திட்டத்தின் உத்தேசம் இயற்கை விபவங்களை செழுப்பித்து இந்தியாவைக் கைத்தொழில் விஷயத்தில் பிறநாடுகளை நம்பியிராது தற்சார்பாகச் செய்தலும், ஜனங்களின் பொருளாதார நிலையை உயர்த்தலும், பொது மக்களின் வாழ்க்கை, கல்வி, சுகாதார வசதிகளை ஒழுங்காக வளர்ச்சியுறச் செய்தலுமேயாகும்.

ஜே. கே. ஸ்தாபனங்கள் தங்கள் அங்க ஸ்தாபனங்கள் வழியாக பற்பல கைத்தொழிற் துறைகளில் விறங்கி மிகுந்த அக்கறையுடன் முயற்சித்து வருகின்றன.

## பொருள்களும், தொழில்களும்

நெசவுகள்: பருத்தி* கம்பளி* ஹொஸியரி* சணல்* இரும்பு, எஃகு* உலோக நிர்மாண வேலைகள்* ரசாயனப் பொருள்கள்* குடும்பத்திற்கும் கைத் தொழிலுக்கும் வேண்டிய எண்ணெய்களும் சோப்புகளும்* வனஸ்பதி, சர்க்கரை மற்ற உணவுப் பொருள்கள்* ஜூஸ்* எலெக்ட்ரிக் ப்ளாஸ்டிக் பிட்டிங்குகள்* கைத்தொழிலுக்கு ஏற்ற ரப்பர் பொருள்கள்* ப்ளைவுட், லாமினேட்டட் கட்டட போர்டுகள்* ஸ்ட்ரா போர்டு* பசு போர்டு* கண்ணாடிச் சாமான்கள்* அலுமினியம்* ப்ரொடியூஸர் கியாஸ் ப்ளாண்ட்* டயர் பழுது பார்த்தல்* பாங்கிங்* இன்ஷூரன்ஸ்* லேவாதேவியும் முதனீடும்.



**ஜே. கே. இண்டஸ்ட்ரீஸ்**

**கமலா டவர், கான்பூர்.**






சோப் பாக் செய்பவர் சொல்லுகிறார் . . .

"அழுக்கடைந்த வஸ்திரங்களை சுலபமாக வெளுப்பதற்கு "சுய மாக வெளுக்கும் நுரை" உதவுகிறது. எனக்கும் என்னுடன் வேலை செய்வோருக்கும் ஸன்லைட் சோப்பை உபயோகப் படுத்துவதால் இது நன்றாகத் தெரியும். ஆடைகளில் இருக்கும் அழுக்கைத் தானாகவே போக்கக்கூடிய சக்திக்கு "சுயமாக வெளுகக்கும் நுரை" என்று பெயர். ஸன்லைட் சோபபின் நுரை வெளுக்கும் வேலையை சிரமமின்றி செய்கிறது. நமது சோப் செய்யும் ரசாயன சாஸ்திரிகள் அதில் 'சுய சக்தி' வாய்ந்த நுரை நிறைய இருப்பதால அவ்வாறு சாத்தியமாகிற தென்கிறார்கள். 'சுய சக்தி' வாய்ந்த சோப் அழுக்கைத் தொட்ட உடன் போக்கிவிடுகிறது."

# ஸன்லைட் சோப்




## சுயமாக வெளுக்கும் நுரை உடையது

இப்பொழுது மெழுகுத் தாளினால் சுற்றப்பட்டு விற்கப்படுகிறது

ஒரு லீவர் பிரதர்ஸ் தயாரிப்பு

# கல்கி பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| மலர் 4<br>இதழ் 49 | 1945 ஜூலை 15 | பார்த்திப<br>ஆனி 32 |




** கல்கியில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

யுத்தம் வந்தாலும் வந்தது; எத்தனையோ மனிதர்களுக்குத் திடீர், திடீரென்று யோகம் அடித்துப் பெரும் பணக்காரர்கள் ஆனதைப் பார்த்தோம்.

மனிதர்களுக்கு வரும் யோகத்தைப்போல் இடங்களுக்கும் யோகம் அடிக்கும் போலும்!

திடீரென்று இம்மாத ஆரம்பத்தில் ஸிம்லாவுக்கு யோகம் அடித்தது. நமது தேசத்தின் மாபெரும் தலைவர்கள் ஸிம்லாவை நோக்கிச் சென்றார்கள். நாற்பது கோடி இந்திய மக்களின் கவனமும் ஸிம்லாவை நோக்கித் திரும்பியது.




ஸிம்லாவிலும் குறிப்பிட்ட ஒரு மனிதர் என்ன செய்கிறார், என்ன சொல்கிறார், என்ன நினைக்கிறார் என்பதிலே தேச மக்கள் அதிகமான சிரத்தை காட்டினார்கள்.

அப்படி தேசத்தின் கவனத்தைக் கவர்ந்தவர் மகாத்மா காந்திதான் என்று சொல்லவும் வேண்டுமோ?

ஸிம்லா மலை உச்சியில் தேசியக்கொடி பறப்பதையும், அதன் குளிர்ந்த நிழலில், பொதுமக்கள் புடை சூழ, மகாத்மா காந்தி வைஸ்ராய் அரண்மனை ரிக்ஷாவில் டவாலி சேவகரால் இழுக்கப் பட்டுச் செல்லும் காட்சியையும் நமது இந்த இதழ் அட்டைப் படத்தில் பார்க்கிறோம்.

நமது அரும்பெரும் தலைவர்கள் தேசத்துக்காகப் படும் எத்தனையோ கஷ்டங்களோடு மனிதர்கள் இழுக்கும் ரிக்ஷாவில் போகவேண்டியிருக்கும் கஷ்டத்தையும் அவர்கள் அநுபவிக்க வேண்டியிருப்பதைக் கண்கூடாகக் காண்கிறோம்.

ஸிம்லா மலையில் வைஸ்ராயையும் பஞ்சாப் கவர்னரையும் தவிர வேறு யாரும் மோட்டாரில் போகக்கூடாது என்று மனுஸ்மிருதியில் எழுதப்பட்டிருக்கிறபடியால் மேற்படி ரிக்ஷாவில் போகும் கஷ்டத்தை நமது தலைவர்கள் அநுபவிக்க வேண்டியிருக்கிறது.

தாங்கள் எவ்வளவு கஷ்டப்பட்டாலும் தேசத்துக்கு நன்மை விளைய வேண்டுமென்னும் ஒரே நோக்கத்தோடு நமது தலைவர்கள் பெரு முயற்சி செய்து வருகிறார்கள் என்பதைப் பத்திரிகைகளின் மூலம் அறிந்து வருகிறோம். அவர்களுடைய முயற்சி மகத்தான வெற்றி பெற்றது என்னும் செய்தியை இன்றைக்கு நாளைக்குள் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்.



ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி
உதவும் சங்கீதக் கச்சேரி

★

# மதுரை காலேஜ் நிதிக்காக

ஜூலை மீ 28-ம் உ சனிக்கிழமை மாலை 7-மணிக்கு

## மதுரை சிந்தாமணி டாக்கீஸில்

★

தஞ்சாவூர் சங்கரய்யர் ... பிடில்
கல்பாத்தி ராமனுதன் ...மிருதங்கம்
மதராஸ் வேணு நாயக்கர்... கஞ்சிரா
ஆலங்குடி ராமச்சந்திரன் ... கடம்

★

டிக்கெட்டுகள் :
ரூ. 250/- 100/- 25/- 10/- & 5/-

மதுரையில் கீழ்க்கண்ட இடங்களில் டிக்கெட்டுகள் கிடைக்கும்.

சிந்தாமணி டாக்கீஸ், கீழவெளி வீதி
ராயல் டாக்கீஸ், தெற்கு மாசி வீதி
காரிக்கார் & கோ., பாலெஸ் ரோடு
— மதுரை காலேஜ் ஆபீஸ் —

மைக், ஒலிபெருக்கி ஏற்பாடுகள் :
திருச்சி ரேடியோ சேல்ஸ் & சர்வீஸ்.

---

# ஸீதாலக்ஷ்மி சங்கரய்யர்
இயற்றிய

## ராமன் நூல் வேலை
புஸ்தகங்கள்
( தமிழில் )

பின்வரும் புஸ்தகங்கள் வெளியாகி விட்டன :

| | |
|---|---|
| ஆரம்ப புஸ்தகம் 8 படங்கள் அடங்கியவை ... விலை | 0-2-6 |
| புஸ்தகம் நம்பர் 1. 3 வயதிலிருந்து 4 வயது வரையுள்ள பெண் குழந்தைகளின் ஜம்பர் .... | 0-6-0 |
| நம்பர் 2. 9 வயதிலிருந்து 11 வயது வரையுள்ள பிள்ளைகளின் ஸ்வெடர் .... | 0-6-0 |
| நம்பர் 3. ஒரு வயதிலிருந்து 2½ வயது வரையுள்ள குழந்தைகளின் கோட்டும் ஸாக்ஸும் ... | 0-6-0 |
| நம்பர் 4. 9 வயதிலிருந்து 11 வயது வரையுள்ள பெண் குழந்தைகளின் ஸ்வெடர் ... | 0-6-0 |
| நம்பர் இங்கிலீஷில் ஸ்ரீ மீனாக்ஷி ஸீதாராமனால் மொழிபெயர்க்கப் பட்டிருக்கிறது. .... விலை அணா | 0-6-0 |

(தபால் சார்ஜ் பிரத்தியேகம்)

●

இந்த புஸ்தகங்கள் கீழ்க்கண்ட அட்ரஸில் கிடைக்கும்.

**Mrs. Seethalakshmi-Sankara Aiyar**
C/o Mrs. Lakshmi Rajangam
MANNARPURAM
TRICHINOPOLY




மலர் 4 } தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 49

# என்ன சேதி?

## "வீரருக்கு வரவேற்பு"

மேற்கண்ட தலைப்புடன் "கல்கி"யில் வெளியான தலையங்கத்தைக் குறித்து இன்னும் நமக்குக் கடிதங்கள் வந்து கொண்டிருக்கின்றன. இந்தியத் தரைப் படையையும் ஆகாசப் படையையும் சேர்ந்தவர்களிடமிருந்து வருகின்றன. வருகிற கடிதம் ஒவ்வொன்றிலும் 'தேச பக்தியில் நாங்கள் வேறு யாருக்கும் குறைந்தவர்கள் அல்ல' என்னும் விஷயம் வற்புறுத்தப்பட்டிருக்கிறது. தங்களைப் பற்றிச் 'சோற்றுப் பட்டாளம்' என்று கூறுகிறவர்களை அக் கடிதங்கள் வன்மையாகக் கண்டிக்கின்றன. 'யுத்தத்துக்குப் பின்பு இந்தியாவின் விடுதலைப் போராட்டம் நடந்தால் அதில் நாங்கள் முன்னணியில் நிற்போம்' என்றும் நமது வீரர்கள் உறுதி கூறுகிறார்கள்.

துரதிர்ஷ்டவசமாக ஐரோப்பிய யுத்தம் முடிந்தும் இன்னும் நமது காகிதப் பஞ்சம் தீர்ந்தபாடில்லை. எனவே, நமது வீரர்களின் கடிதங்களையெல்லாம் பிரசுரிக்கும் மகிழ்ச்சியை நாம் அடைவதற்கில்லாமலிருக்கிறது.

ஆனால், நமது இந்திய சேனா வீரர்களுக்கு ஒன்று கூற விரும்புகிறோம். அவர்களைப் பற்றி இனிமேல் தேசத்தில் யாருமே குறை கூற முன்வர மாட்டார்கள். 'சோற்றுப் பட்டாளம்' என்று சொல்லவும் துணிய மாட்டார்கள். ஏனெனில், வேவல் திட்டம் வந்த பிறகு தேசத்தின் அரசியல் நிலைமை மாறி விட்டது; தேச மக்களின் மனோ பாவமும் விரைவில் அடியோடு மாறி விடும் என்பதில் ஐயமில்லை.

## ஒப்புக் கொண்டதுதான்!

வேவல் திட்டத்தின் நிபந்தனைகளுக்குள்ளே முதலாவது நிபந்தனை என்னவென்று தெரியுமல்லவா? புதிய தேசிய நிர்வாக சபையானது, "ஜப்பான் யுத்தத்தை அதி தீவிரமாக நடத்தி வைக்க வேண்டும்" என்பதுதான்.

எனவே, தேசத்துக்கு நல்லதிர்ஷ்டமிருந்து, காங்கிரஸ் தலைவர்கள் அடங்கிய தேசிய நிர்வாக சபை ஏற்பட்டுவிட்டால், ஜப்பான் யுத்தத்தை அப்புறம் 'ஏகாதிபத்திய யுத்தம்' என்று யாரும் சொல்லமாட்டார்கள். பின்னர் அது 'தேசத்தின் யுத்தம்' அல்லது 'தேச மக்களின் யுத்தம்' ஆகிவிடும். அப்பேர்ப்பட்ட தேசிய யுத்தத்தில் சேர்ந்து போர் முனை சென்ற வீரர்கள் திரும்பி வரும்போது அவர்களைக் காங்கிரஸ் கமிட்டிகளின் சார்பாகக் காங்கிரஸ் தலைவர்களே மாலையிட்டு வரவேற்க வேண்டியதாகத்தானிருக்கும்.

அப்படியே ஒரு வேளை தேசத்தின் துரதிர்ஷ்டவசமாக, வேவல் திட்டம் உருப்படாமல் போனபோதிலும், நமது காங்கிரஸ் தலைவர்கள் 'ஜப்பான் யுத்தத்தைத் தீவிரமாக நடத்தும் நிபந்தனை'யை ஒப்புக்கொண்டது ஒப்புக் கொண்டதுதான் அல்லவா? அதை யாராலும் இனிமேல் மாற்ற முடியாது. எனவே, சைன்யத்தில் சேர்ந்துள்ள இந்திய வீரர்களையும் யாரும் தூற்றவோ அவமதிக்கவோ முடியாது.

எனவே, எந்த வகையிலும் இனித் தங்களுக்கு நாட்டில் நல்ல வரவேற்பு நிச்சயம் என்று இந்திய சைன்யத்தைச் சேர்ந்த வீரர்கள் நிம்மதி யடையலாம்.

## உதவி செய்யுங்கள்

ஜப்பானிடமிருந்து இந்தியாவைக் காப்பாற்ற உதவிய போர் வீரர்களைப் பற்றிச் சொல்ல பிறகு, இந்தியாவின் சுதந்திரப் போரில் தெரிந்தோ தெரியாமலோ ஈடுபட்டு அதன் பயனாகச் சிறையில் வாடும் வீரர்களைப் பற்றி நேயர்களுக்கு நினைவூட்ட வேண்டியிருக்கிறது. இப்படிப்பட்டவர்களின் ஏழைக் குடும்பத்தாருக்குச் சொற்ப உதவி அளிக்கும் பொருட்டுப் "பாரத தேவி" ஆசிரியர் நிதி திரட்டுவதை நேயர்கள் அறிவார்கள். "இப்போதுதான் அரசியல் பிரச்னை தீர்ந்து நமது காங்கிரஸ் தலைவர்கள் அதிகாரத்துக்கு வரப் போகிறார்களே, அவர்கள் அரசியல் கைதிகளை விடுதலை செய்துவிட மாட்டார்களா, இன்னும் என்னத்திற்காக நிதி?" என்று சிலர் சந்தேகப்படுவதாகத் தெரிகிறது. ஸ்ரீ என். ராமரத்தினம் எந்த மாதிரி கைதிகளின் குடும்ப உதவியை ஏற்றுக் கொண்டிருக்கிறார்களோ, அந்தக் கைதிகளின் விடுதலை விஷயம் அவ்வளவு சுலபமானதல்ல; உடனே நடக்கக்கூடியதுமல்ல. நேரடியான அரசியல் வழக்குகளில் சிறைப்பட்டவர்கள் உடனே விடுதலை செய்யப்படுவார்கள். ஆனால், பிரஸ்தாபத்திலுள்ள கைதிகள் அரசியலை யொட்டிப் பல்வேறு விபரீதக் குற்றம் சாட்டப்பட்டவர்கள். அவர்களை விடுதலை செய்யும் விஷயத்தில் சட்டம், சடங்கு, சம்பிரதாயம் எல்லாம் குறுக்கிடக் கூடும். காங்கிரஸ் மந்திரிகளாக வருகிறவர்களின் தைரியத்தையும் ஓரளவு மேற்படி காரியம் பொறுத்திருக்கிறது. எனவே, இப்போதைக்குப் "பாரத தேவி" ஆசிரியர் தொடங்கியிருக்கும் பணியைத் தொடர்ந்து நடத்துவது அவசியமாகும். ஆதலின் விடுதலை விஷயம் நிச்சயமாகும் வரையில் மேற்படி நிதிக்குப் பரிபூரண ஆதரவு அளிக்க வேண்டுமென்று தமிழ் மக்களைக் கேட்டுக் கொள்கிறோம்.

## கவிஞர் நிதி

காந்தி யுகத்துக் கவிஞர் நாமக்கல் ஸ்ரீ ராமலிங்கம் பிள்ளைக்குத் தமிழ் மக்கள் சார்பாகப் பண முடிப்பு அளிக்கும் முயற்சி நடந்து வருகிறதல்லவா? பாரதியார் ஞாபகார்த்த அல்லிவார விழாவுக்காக ஒளவையார் நாடகம் நடத்தி ரூ. 1140 சேர்த்த டி. கே. எஸ். சகோதரர்கள் நாமக்கல் கவிஞர் நிதி முயற்சியைச் சும்மா விட்டு விடுவார்களா? நாளது ஜூலை 19உ யன்று திருச்சியில் பிரசித்தி பெற்ற சரித்திரக் கதையான சிவாஜி நாடகத்தை நடத்தி அந்த நாடகத்தின் வசூலைக் கவிஞர் நிதிக்கு அளிக்கப் போகிறார்களாம். திருச்சி வாசிகள் இந்த அரிய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு இருவகைப் பயன்களையும் அடைவார்கள் என்று நம்புகிறோம்.

## திருப்பூரில் வெள்ளி விழா

சூதுக்கும் பருத்திக்கும் பெயர் போன தூய திருப்பூர் நகரத்தில் சென்ற மாதத்தில் ஒரு வெள்ளி விழா நடைபெற்றது. சாதாரணமாய் நாடகம், சினிமா முதலியவைகளுக்குத்தான் வெள்ளி விழா நடைபெறுவது வழக்கம். ஆனால் திருப்பூரில் நடந்த வெள்ளி விழா அத்தகையதல்ல. திருப்பூர் நகர சபையின் 25-வது ஆண்டு விழாவைக் கொண்டாடவே அங்கு வெள்ளி விழா நடத்தியிருக்கிறார்கள்.

அப்படி வெள்ளி விழாக் கொண்டாடும்படியாக திருப்பூர் நகர சபை என்னத்தைச் சாதித்து விட்டது என்று தானே கேட்கத் தோன்றுகிறது?

இதுவரை நகர சபையினால் திருப்பூர் வாசிகள் அடைந்த நன்மைகள் ஒருபுறமிருக்கட்டும். இந்த வெள்ளி விழா சமயத்தில் மேற்படி நகர சபைக்கு இருபதாயிரம், நாற்பதாயிரம் என்னும் கணக்கில் வந்து குவிந்துள்ள நன்கொடைகளைப் பார்க்கும்போது சற்று பிரமிக்கத்தான் வேண்டியிருக்கிறது. ஆனால் இதற்கெல்லாம் மேற்படி நகர சபைத் தலைவர் ஸ்ரீ கே. என். பழனிச்சாமிக் கவுண்டர்தான் காரணம் என்று தெரிந்ததும் நாம் அவ்வளவு பிரமிப்பு அடையவில்லை. ஸ்ரீ பழனிச்சாமிக் கவுண்டர் மனம் வைத்தால் திருப்பூரில் நடக்காத காரியம் ஒன்றும் கிடையாதல்லவா? ஸ்ரீ ஆர். வி. ஈசுவரமூர்த்திக் கவுண்டர் முதலிய பிரமுகர்கள் அளித்திருக்கும் நன்கொடைகளைக் கொண்டு திருப்பூர் நகரத்தையே தேவலோகமாக மாற்றுவதற்குப் பிளான் போட்டிருக்கிறார் ஸ்ரீ பழனிச்சாமிக் கவுண்டர். நகர மண்டபம், மருத்துவ சிசு சம்ரக்ஷண சாலை, நாலு பக்கமும் மணி காட்டும் மணிக் கூண்டு, வெல்பேர் கிளப், வாசகசாலை, ஸ்நானக் கட்டம், நந்தவனங்கள் இவ்வளவும் அமைக்கப் போகிறார்கள். இதையெல்லாம் பார்க்கும்போது திருப்பூர் நகரம் திருவாங்கூர், மைசூரைப் போன்ற சௌந்தரிய நகரமாக மாறிவிடலாம் என்றே தோன்றுகிறது. நடக்கட்டும்; தமிழ் நாட்டுக்கும் ஒரு சௌந்தரிய நகரம் வேண்டியதுதானே?

---

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: எம். ஏ. நரசிம்மன், 11/28, மதுரை குப்பையர் தெரு, செவ்வாய்ப் பேட்டை, சேலம்.

# நிகழ்ச்சிச் சித்திரம்

பெர்லின்நகரின் நிர்வாகப் பொறுப்பு விஷயமாக நேசதேசங்களிடையில் சிறு தகராறு ஏற்பட்டிருக்கிறது. விஷயம் இதுதான்!







சீன அயல் நாட்டு மந்திரி டாக்டர்ஸூங் மாஸ்கோ சென்று ஸ்டாலினைப் பேட்டி கண்டார்.

**டாக்டர் ஸ்டாலின் உள்நாட்டு வியாதி நிபுணர்.**



-உம்மன்


ஸிம்லாவில் ஜனப் ஜின்னாவின் முட்டுக்கட்டையைக்
காங்கிரஸ் தாண்டிவிட்டது. "வேவலும் தாண்டி
விடுவாரா?" என்றகேள்விக்கு
இன்றுவிடை கிடைக்கலாம்.


அயர்லாந்து பார்லிமெண்டு அங்கத்தினர்
ஒருவர் தற்போதைய அயர்லாந்தின்
அரசியல் நிலைமையை கதவில் வால்
சிக்குண்ட பூனையின் கதிக்கு ஒப்பிட்டார்.
பிரிட்டிஷ்
ஏகாதிபத்தியம்


"பிரான்ஸ்-ஸ்பெயின் எல்லையில் சர்ச்சில் ஓய்வெடுத்துக் கொள்கிறார்," என்று ஒரு
செய்தி கூறுகிறது. ஒருவேளை ஸ்பானிஷ் சர்வாதிகாரி பிராங்கோவுடன் பேசத்தான்
போயிருக்கிறாரோ என்று சிலர் சந்தேகிக்கிறார்கள்.
ஜெனரல் பிராங்கோ
பிரான்ஸ்-ஸ்பெயின் எல்லை.

# கடவுளுக்கு வந்தனம்!

கடவுள் ரொம்ப நல்லவர். அதோடு புத்திசாலி. தம்மை நம்பியவர்களை அவர் கைவிடுவதில்லை. சில சமயம் சில காரியத்துக்காகக் கைவிடுவது போல் பாசாங்கு செய்தாலும் நிஜமாகக் கைவிட்டு விடுவதில்லை. அதோடு தமக்குச் செய்யப்பட்ட உதவியையும் அவர் மறப்பதில்லை. நன்றி மறக்கும் கெட்ட வழக்கம் கடவுளிடம் கிடையவே கிடையாது.

தமிழ் நாட்டில் சில காலத்துக்கு முன்பு தெய்வத் திருக்கோயில்கள் எல்லாம் ஜீரணமடைந்து கிடந்தன. உலகமே வியக்கக் கூடிய அற்புத சிற்பங்களுக்கு நிலைக்களனாயிருந்த ஆலயங்கள் இடிந்தும் தகர்ந்தும் வெளவால் குடிகொண்டும் பாழடைந்து வந்தன. அப்பேர்ப்பட்ட சமயத்தில் செட்டிமார் நாட்டிலிருந்து சில தனவந்தர்கள் கிளம்பினார்கள். தமிழ் நாட்டின் புராதன ஆலயங்களைப் புதுப்பித்துக் கட்ட முன் வந்தார்கள். லட்சக் கணக்கான பணம் செலவிட்டுக் கோயில்களை ஜீரணோத்தாரணம் செய்தார்கள். தேவாலயங்களைப் புதுப்பித்ததோடு தமிழ் நாட்டின் பரம்பரைச் செல்வமான சிற்பக் கலைக்கும் புத்துயிர் தந்தார்கள்.

இதை யெல்லாம் சமீப காலத்தில் தோன்றிய ஜாதித் துவேஷ இயக்கங்கள், அவமரியாதைக் கிளர்ச்சிகள் முதலிய காரணங்களினால் தமிழ் மக்கள் மறந்து விட்ட போதிலும், கடவுள் மட்டும் மறக்கவில்லை. மறவாமல் இருந்ததோடு நல்ல சமயத்தில் முன் வந்து ஒத்தாசையும் செய்திருக்கிறார்.

அதாவது ஜப்பானியர் ஆதிக்யத்தின் கீழ்ப் போன பர்மாவைத் திரும்பப் பிடித்துக் கொடுத்திருக்கிறார்.

கடவுள் அருளால் பர்மா தேசத்தில் மூன்றில் இரண்டு பகுதி — முக்கியமான பகுதி — விடுதலை யடைந்தது.

பாக்கி விடுதலை யாகவேண்டிய பகுதி காடும் மேடுமான பிரதேசங்கள். அவையும் சீக்கிரத்தில் விடுதலையாகி விடும் என்பதில் சந்தேகமில்லை.

"பர்மாவைக் கடவுள் விடுதலை செய்தார்" என்று சொல்லும்போது, நம்முடைய சொந்த அபிப்பிராயத்தை மட்டும் நாம் சொல்லவில்லை. செட்டி நாட்டுப் பிரமுகரும் பர்மாவில் சொத்து சுதந்திரமுள்ள தமிழர்களில் முதன்மை யானவருமான ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களின் அபிப்பிராயத்தைத்தான் எடுத்துச் சொல்கிறோம்.

* * *

பம்பாயில் சென்ற சனிக்கிழமை யன்று பர்மா வர்த்தகச் சங்கத்தாரின் ஆதரவில் ஒரு பொதுக் கூட்டம் நடந்தது. அந்தக் கூட்டத்தில் பர்மாப் பிரச்னையைக் குறித்துச் செட்டி நாட்டு ராஜா சவிஸ்தாரமாகப் பேசியிருக்கிறார். பேச்சு தினசரிப் பத்திரிகைகளில் வெளியாகி யிருக்கிறது.

"பர்மாவின் விடுதலைக்காக முதன் முதலில் கடவுளுக்கு வந்தனம் செலுத்துவது நமது கடமையாகும்" என்று ராஜா ஸர் சொல்லியிருப்பதை நாம் மனப்பூர்வமாக ஆமோதிக்கிறோம்.

அவனன்றி ஓரணுவும் அசையாது! அப்படியிருக்கும்போது பர்மா விடுதலை மட்டும் அவனுடைய விருப்பமின்றி அசைந்திருக்கக் கூடுமா? ஒரு நாளும் இல்லை. மேலும் இந்த பர்மா விஷயத்தில் கடவுள் செட்டிமார்களுக்குப் பட்டிருக்கும் நன்றிக்கடன் விஷயமும் சேர்ந்திருக்கிறதென்பதை முதலிலேயே பார்த்தோமல்லவா?

அடுத்தபடியாக பர்மா யுத்தத்தில் மகத்தான பங்கு எடுத்துக் கொண்ட நமது இந்திய வீரர்களைப் பற்றி ராஜா ஸர் குறிப்பிடுகிறார். அது விஷயத்தில் தமது திருப்தியையும் மகிழ்ச்சியையும் பெருமையையும் தெரிவித்துக் கொண்டிருக்கிறார். "இந்தியத் துருப்புகள் இல்லாவிடில் பர்மாவைத் திரும்பப் பிடித்திருக்க முடியாது!" என்று ஆனானப்பட்ட லார்ட் லூயி மவுண்ட் பேட்டன் துரையே சொல்லியிருக்கும்போது, நாம் அது குறித்துப் பெருமைப் படுவதற்கு என்ன தடையிருக்க முடியும்?

இவ்விதம் கடவுளுக்கு வந்தனமும், கடவுள் யார் மூலமாகக் காரியம் செய்

தாரோ அவர்களுக்கு மகிழ்ச்சியும் தெரிவித்த பிற்பாடு. செட்டி நாட்டு ராஜா, "அப்பா! பூசாரி! கொஞ்சம் வழி விடு! ரொம்ப அவசரம்! சீக்கிரம் வழி விடு!" என்று கேட்கிறார். விடுதலையடைந்த பர்மாவுக்குள் அங்கு ஏற்கெனவே வீடு வாசல் கடை கண்ணி நிலபுலம் வைத்துக் கொண்டு வாழ்ந்து வந்த இந்தியர்கள் திரும்பப் போவதற்குத்தான் வழிவிடச் சொல்கிறார். விடுதலையடைந்த பர்மாவில் இப்போது ஆதிக்கம் செலுத்தும் பிரிட்டிஷ் சர்க்கார் பூசாரியைப் பார்த்துத்தான் கேட்கிறார்!

* * *

இந்த விஷயமாக நாம் ஏற்கெனவே பல முறை இந்தப் பத்திரிகையில் எழுதியிருக்கிறோம் என்பது நேயர்களுக்கு நினைவிருக்கலாம்.

"மதராஸிக்கு வந்த மகிமை" என்னும் தலையங்கத்தில், "மதராஸி பயனியர் படைவீரர்கள் பர்மாவில் பாதை செப்பனிட்டுக் கொடுப்ப தெல்லாம் பிரிட்டிஷ் சர்க்காரும் பிரிட்டிஷ் முதலாளிகளும் திரும்பிப் போய் உட்கார்ந்து கொள்வதற்கு மட்டுந்தானா? அதே பாதையில் இந்தியர்களும் திரும்பிப் போக அனுமதிக்கப்படுவார்களா?" என்று கேட்டிருந்தோம்.

பர்மாவில் சொத்து சுதந்திரம் படைத்தவர்களும், பர்மாவிலிருந்து திரும்பி வந்தவர்களும் இது விஷயமாகக் கிளர்ச்சி ஒன்றும் செய்யாமல் சும்மா இருப்பது நமக்குப் பெரு வியப்பை யளித்தது. தூங்கின கன்றைப் பற்றி ஏதோ சொல்வார்களே, அந்த கதி நம்மவர்களுக்கும் நேரப் போகிறதே என்று கவலைப்பட்டோம்.

நல்ல வேளையாக இப்போதாவது இது சம்பந்தமான கிளர்ச்சி தொடங்கியிருப்பதைப் பாராட்டுகிறோம்.

"இது அவசரமான விஷயம்" என்று ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் சொல்லியிருப்பது ரொம்ப சரி.

பர்மாவில் உடைமை படைத்திருந்தவர்கள் இச் சமயம் உடனே அந் நாட்டுக்குப் போகவேண்டும். அவசரமாகப் போகவேண்டும். இல்லாவிடில் அவர்களுடைய உடைமையெல்லாம் சுவாஹாகரம் செய்யப்பட்டு விடலாம் என்பதற்கு அறிகுறிகள் சில காலமாகத் தோன்றி வருகின்றன. இவற்றில் முக்கியமானது இலண்டனிலுள்ள கன்ஸர்வேடிவ் முதலாளிக் கும்பல் சில நாளைக்கு முன்பு வெளியிட்ட அறிக்கையாகும். அதில், பர்மாவை 'விடுதலை' செய்த பிறகு அதை ஆளும் முறையைப் பற்றிச் சில மணியான யோசனைகள் வெளியாகியிருந்தன.

"பர்மாவில் இந்தியர்களுக்குச் சொந்தமாயிருந்த நிலங்களையும் உடைமைகளையும் சுவாஹாகரம் செய்து பர்மியரிடம் கொடுத்து விட வேண்டியது! இவ்விதம் பர்மியரைத் திருப்தி செய்துவிட்டு வெள்ளைக்காரர்கள் பர்மாவில் அழுத்தமாக உட்கார்ந்து கொண்டு அதிகார தோரணையில் பர்மியரைச் சுரண்டிவர வேண்டியது!"

எப்படியிருக்கிறது நியாயம்? கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு உடைப்பது போல் உடைத்து விட்டு, அதைத் தன் வயிற்றிலேயே இட்டு நிரப்பும் நியாயமாயிருக்கிறதா இல்லையோ?

இந்த அற்புதமான நியாயத்தை அனுஷ்டிப்பதற்கு ஒரு அனுகூலமான நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்பதையும் மேற்படி வெள்ளைக்காரக் கொள்ளைக் கும்பல் எடுத்துக் காட்டியிருக்கிறது. அது என்ன தெரியுமா?

யுத்தம் காரணமாக இந்தியர்களுடைய நில பாத்தியதையை ஸ்தாபிக்கும் தஸ்தவேஜிகள் காணமற் போயிருக்குமாம்! இந்த அநுகூலமான நிலைமையைப் பயன்படுத்திக் கொண்டு இந்தியர்களுடைய சொத்தைப் பிடுங்கிப் பர்மியருக்குக் கொடுத்துவிட வேண்டுமாம்!

எப்படியிருக்கிறது இந்தக் கிராதகர்களுடைய எண்ணம்?

காரியாம்சத்தில் இப்படிப்பட்ட வஞ்சக நோக்கம் நிறைவேறாது என்று நாம் கருதுகிறோம். இருந்தபோதிலும் என்ன நடக்குமோ, எந்த வழியில் பர்மாவிலுள்ள இந்தியர்களின் சொத்துக்கள் பறிபோகுமோ என்று சந்தேகிப்பதற்கு இடமிருக்கிறதல்லவா?

அதோடு, யுத்தம் முடிந்து மூன்று வருட காலம் பர்மாவில் கவர்னரின் யதேச்சாதிகார ஆட்சியே நடைபெறுமென்றும், அதற்குப் பிறகுதான் சட்டசபை முதலியன ஏற்படுமென்றும் பிரிட்டிஷ் சர்க்காரே அறிவித்திருக்கிறபடியால், மேற்படி மூன்று வருஷத்திற்குள் என்ன நடந்துவிடுமோ என்று கவலைப்பட இடமிருக்கிறதல்லவா?

இந்நிலைமையில் நம்முடைய கோரிக்கைகள் என்ன வென்பதையும் செட்டி நாட்டு ராஜா தெளிவாகத் தெரியப் படுத்தியிருக்கிறார்:—

1. யுத்தத்துக்கு முன்பு பர்மாவில் இந்தியர்களுக்கு என்னென்ன உடைமைகள் இருந்தனவோ அவை மேல்

லாம் அவர்களிடம் திரும்ப ஒப்புவிக்கப் படவேண்டும்.

இது விஷயத்தில் வெள்ளைக்காரர் களுக்கும் இந்தியர்களுக்கும் வேற்றுமை காட்டப்படக் கூடாது.

இங்கிலீஷ்காரர்கள் எப்படிப் பர்மாவில் எண்ணெய்க் கிணறுகள், சுரங்கங்கள், தொழிற்சாலைகள் முதலியவற்றுக்குச் சொந்தக்காரர்களானார்களோ, அதே முறையில்தான் இந்தியர்களும் நில புலங்கள், கடை கண்ணிகளுக்குச் சொந்தக்காரர்களானார்கள்.

எண்ணெய்க் கிணறுகள் இங்கிலீஷ்காரர்களிடம் திரும்பி வரும்போது நிலங்களும் இந்தியர்களுக்குத் திரும்பி வரவேண்டியது நியாயமல்லவா?

2. ஜப்பானியரின் ஆதிக்கத்தில் பர்மா இருந்த காலத்தில் இந்தியர்களின் உடைமைகளுக்கு எவ்வளவோ சேதங்கள் நேர்ந்திருக்கும். அவற்றையெல்லாம் உடனே கவனித்துச் சீர்திருத்தா விட்டால் சொத்துக்களே நாசமாகி விடும்.

எனவே, பர்மாவில் தங்களுடைய உடைமைகளைக் கவனிப்பதற்காகப் போக விரும்பும் இந்தியர்களுக்கும், ஏற்கெனவே அங்கே தொழில் செய்து கொண்டிருந்த இந்தியர்களுக்கும் தங்கு தடையில்லாமல் பர்மாவுக்குப் போக அனுமதி தரவேண்டும்.

ஜப்பான் படையெடுப்பின் போது இந்தியாவுக்கு வரச் சௌகரியப் படாமல் அங்கேயே பல இந்தியர்கள் தங்குப்படி நேர்ந்து விட்டது. அவர்கள் இப்போது தாய்நாட்டுக்குத் திரும்பி வந்து உற்றார் உறவினரைப் பார்ப்பதற்கு ஆவலாயிருப்பார்கள். அப்படிப் பட்டவர்களுக்கு இந்தியாவுக்குத் திரும்பிவர அனுமதி தரவேண்டும்.

இந்தியாவிலிருந்து பர்மா போவதற்கும், பர்மாவிலிருந்து இந்தியா திரும்புவதற்கும் வேண்டிய கப்பல் வசதிகளை ஏற்படுத்தித் தரவேண்டும்.

* * *

மேற்கண்ட தர்ம நியாயமான கோரிக்கைகளுக்குப் பக்கபலமாக இரண்டு விஷயங்களை ராஜா ஸர் எடுத்துக் காட்டியிருக்கிறார்.

1. இந்தியர்களால் பர்மா நாடு எவ்வளவோ நலமும் வளமும் பெற்றுச் செழித்திருக்கிறது.

2. பர்மியர்கள் இந்தியரை வெறுக்கவில்லை; வரவேற்கிறார்கள்.

இந்த இரண்டு விஷயங்களையும் தக்க ஆதாரமில்லாமல் குருட்டாம் போக்காக ராஜா ஸர் சொல்லிவிடவில்லை. புள்ளி விவரங்களோடு சொல்லியிருக்கிறார்.

கீழைப் பர்மா பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் வந்தபோது, அந்நாட்டில் 40 லட்சம் ஏக்கரா பூமிதான் சாகுபடியாகி வந்தது.

இந்தியர்கள் பர்மாவுக்குப் போய், பயனற்ற தரிசாகக் கிடந்த நிலங்களையெல்லாம் சாகுபடிக்குக் கொண்டு வருவதற்கு வேண்டிய மூலதனத்தைக் கொடுத்து ஒத்தாசை செய்தார்கள்.

இப்போது 120 லட்சம் ஏக்கரா பூமி சாகுபடியாகி வருகிறது.

இந்த 120 லட்சம் ஏக்கரா பூமியில் நாலில் ஒரு பங்கு அதாவது 30 லட்சம் ஏக்கரா பூமிதான் இந்தியருக்குச் சொந்தமாயிருக்கிறது.

ஆகவே இந்தியர்களின் உதவி காரணமாகப் பர்மியர் முன்னே பெற்றிருந்ததைக் காட்டிலும் 50 லட்சம் ஏக்கரா விவசாய பூமி அதிகமாய்ப் பெற்றிருக்கிறார்கள்.

இந்தியர்களால் பர்மா சர்க்காருக்கு நில வரி ஒரு கோடி ரூபாய் கொடுக்கப் பட்டு வருகிறது.

இன்னும் இந்தியர்களின் மூலம் பர்மாவின் வியாபாரம் செழிப்படைந்து பர்மியரின் பொருள் வளம் பெருகியிருக்கிறது.

இப்படியெல்லாமிருந்தும் பர்மியர் இந்தியரைத் துவேஷிப்பது பற்றிச் செய்திகள் வந்து கொண்டிருந்தனவல்லவா?

இத்தகைய செய்திகள் அவ்வளவு பரிபூரண உண்மையல்ல என்பதற்குச் செட்டி நாட்டு ராஜா ஒரு தக்க அத்தாட்சியை எடுத்துக் காட்டியிருக்கிறார்.

"இந்தியாவிலிருந்து பர்மாவைப் பிரிந்து விடலாமா?" என்ற பிரச்னையின் மேல் பர்மா சட்ட சபைக்குத் தேர்தல் நடந்தபோது, "பிரிக்கக் கூடாது" என்னும் கட்சிக்கே மிகப் பெருவாரியான ஆதரவு கிடைத்தது.

இந்தியர்மீது பர்மியருக்குப் பிரமாத துவேஷம் இருந்திருந்தால் அவ்வாறு வோட்டுக் கிடைத்திருக்குமா?

* * *

பர்மாவில் இந்தியர்களின் உரிமைகளை ஸ்தாபிப்பதற்கு இவ்வளவு காரணங்களையும் சொல்லிவிட்டு, எல்லா

வற்றிற்கும் சிகரம் வைத்தாற்போல் ராஜா ஸர் ஒன்று கூறியிருக்கிறார்.

அதாவது, ''பர்மாவில் எங்களுடைய நிலங்களைச் சட்டரீதியான நியாயமான முறையில் சம்பாதித்தோம். ஆயினும் அந்த நிலங்களை விடாப் பிடியாகப் பிடித்துக் கொண்டிருக்க விரும்பவில்லை. பர்மியருக்கே கொடுத்துவிட வேண்டுமென்றால் கொடுத்துவிடத் தயாராயிருக்கிறோம். ஆனால் அது நியாயமான, நாகரிகமான முறையில் நடக்கட்டும். பர்மாவிலும் இந்தியாவிலும் சுயாட்சி ஏற்பட்டதும், இரண்டு சுயராஜ்ய அரசாங்கத்தினரும் கலந்து ஆலோசித்து முடிவு செய்யட்டும். அவர்களுடைய தீர்ப்பை நாங்கள் மனமுவந்து ஒப்புக் கொள்கிறோம்'' என்று கூறியிருக்கிறார்.

பர்மியர்களின் பெயரைச் சொல்லி இந்தியர்களின் சொத்து சுதந்திரங்களைப் பறித்து அவர்களை ஓட்டையாண்டிகளாக்கி இந்தியாவுக்கு அனுப்பி விட்டு, வெள்ளைக்காரர்கள் பர்மாவை ஏகபோக பாத்தியதையுடன் சுரண்டலாம் என்னும் நோக்கத்தைத் தான் ராஜா ஸர் ஆட்சேபிக்கிறார்.

''யுத்தத்திற்கு முன்னால் எப்படியிருந்ததோ, அப்படியே இப்போது செய்து விடுங்கள் இந்தியர்களுடைய கூட்டுறவு வேண்டுமா, வேண்டாமா என்று தீர்மானிக்கும் பொறுப்பை பர்மிய சுயராஜ்ய சர்க்காருக்கு விட்டு விடுங்கள்!'' என்று கேட்கிறார்.

இதைவிட தர்ம நியாயமான நிராட்சேபணையான கோரிக்கை வேறு ஒன்றும் இருக்க முடியாது.

ஆனபோதிலும், இந்த உலகத்தில் நியாயமும் தர்மமும் இருப்பதினாலேயே ஒரு கட்சி எப்போதும் ஜயித்து விடுவதில்லை.

நியாயத்தையும் தர்மத்தையும் ஆதரித்துப் பெரும் கிளர்ச்சி நடத்துவது பெரும்பாலும் அவசியமாகிறது.

அத்தகைய கிளர்ச்சியைச் செட்டிநாட்டு ராஜா ஆரம்பித்திருக்கிறார்.

அதைத் தமிழ் மக்கள் ஒருமுகமாக ஆதரிக்க வேண்டும்.

பர்மாவிலே இந்தியர்களுடைய உடைமைகள் நஷ்டமானால் அதில் பெரும் பகுதி நஷ்டம் தமிழ் மக்கள் அடையும் நஷ்டமாகவே இருக்கும்.

எனவே, இந்தக் கிளர்ச்சியைத் தீவிரமாக நடத்தி வெற்றி பெறச் செய்வது தமிழ் மக்களின் விசேஷ பொறுப்பாகும்.

# ஆகாச வெடி

''ஜூலை 26உயன்று பகல் போஜனத்திற்குள் பிரிட்டனில் சோஷலிஸ்ட் சர்க்காரா தேசிய சர்க்காரா என்பது தெரிந்துவிடும்!'' —ஒரு செய்தி.

இந்த இரண்டு கட்சிகளும் பகல் போஜனத்தை முடித்துக் கொண்ட பிறகே தேர்தல் முடிவைத் தெரிந்து கொள்வதுதான் நலம்.

★

''திருவாங்கூர் சமஸ்தானத்திலேயே தங்கியிராமல் பிற சமஸ்தானங்களுக்கும் வந்து தசாவதாரத்தைக் காட்ட வேண்டும்'' என்று ஸ்ரீ ராஜமாணிக்கம் அவர்களுக்கு தங்கப் பதக்கம் அளித்த ஸ்ரீ சுந்தரமூர்த்தி கூறினார்.

—ஒரு செய்தி.

தங்கப் பதக்கம் அளித்த பிறகு தங்கக் கூடாதென்று சொல்வது அவ்வளவு பொருத்தமாயில்லையே!

★

''புது நிர்வாக சபையில் முஸ்லிம் மெம்பர்களை நியமிக்கும் விஷயத்தில் ஜின்னா கேட்ட வாக்குறுதிகளுக்கு வேவல் இணங்க மறுத்துவிட்டார்.''

—ஒரு செய்தி.

ஜின்னாவின் கோரிக்கைகளை வேவல் திட்டமாய் மறுத்துவிட்டார் போலும்!

★

''பிரிட்டனிலுள்ள மேதாவிகள் சேர்ந்து தயாரித்த வேவல் திட்டத்தை இந்தியாவிலுள்ள மேதாவிகள் ஒப்புக் கொள்ள வேண்டும்.'' —ஒரு செய்தி.

மேதாவிகளின் திட்டத்துக்கு முட்டுக்கட்டை போடுவதுதான் பெரிய மேதாவித்தனம் என்று ஒரு மேதாவி நினைத்தால், அதற்கு என்ன செய்வது?

★

''ஈரான் எண்ணெய் விஷயமாக மூவர் மகாநாட்டில் ஸ்டாலின் விவாதிப்பார் என்று இப்பொழுது முதலே பிரஸ்தாபம் இருந்து கொண்டிருக்கிறது.''

—ஒரு செய்தி.

எண்ணெய் விஷயமானதால் முன் கூட்டியே புகையத் தொடங்கியிருப்பதில் ஆச்சரியம் இல்லையல்லவா!

# சிவகாமியின் சபதம்



கல்கி

அத்தியாயம் 33

## இருள் சூழ்ந்தது

மாமல்லர் அன்று ஆயனரின் அரண்ய வீட்டிலிருந்து புறப்பட்டுக் காஞ்சி நகரை நோக்கிச் சென்ற போது உச்சி நேரம். நிர்மலமான நீல ஆகாசத்தில் புரட்டாசி மாதத்துச் சூரியன் தலைக்கு மேலே தகதக வென்று ஸ்வச்சமாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தான். ஆயினும் மாமல்ல நரசிம்மருக்கு அப்போது வானமும் பூமியும் இருள் சூழ்ந்திருந்ததாகத் தோன்றியது.

அமாவாசை நள்ளிரவில் நாலாபுறமும் வானத்தில் கன்னங்கரிய மேகங்கள் திரண்டிருந்தாற் போன்ற அந்தகாரம் அவர் உள்ளத்தைக் கவிந்து கொண்டிருந்தது. ஒரு சின்னஞ்சிறு நட்சத்திரத்தின் மினுக் மினுக் என்னும் ஒளிக் கிரணத்தைக் கூட அந்தக் காரிருளில் அவர் காணவில்லை.

ஆனால் திடீர் திடீர் என்று சில சமயம் பேரிடி முழக்கத்துடன் கூடிய மின்னல்கள் — கீழ் வான முகட்டிலிருந்து மேல்வான முகடு வரையில் அந்தகாரத்தைக் கிழித்துக் கொண்டு பாய்ந்த மின்னல்கள் — கண்ணைப் பறித்து மண்டையைப் பிளக்கும் பயங்கர தீட்சண்ய ஒளியுடைய மின்னல்கள் — மாமல்லருடைய மன ஆகாசத்தில் தோன்றத்தான் செய்தன. அந்த மின்னல் ஒளியெல்லாம் ஆயிரமாயிரம் கூரிய வாள்களும் வேல்களும் போர்க்களத்தில் ஒன்றோடொன்று உராயும் போது சுடர் விட்டு ஒளிர்ந்து உடனே மறையும் மின்னல்களாகவே அவருடைய அகக் காட்சியில் தோற்றமளித்தன.

சிவகாமி அடியோடு நஷ்டமாகி விட்டதாகவே மாமல்லர் உறுதி கொண்டிருந்தார். சளுக்கரால் சிறைப்பட்டுச் சிவகாமி உயிர் வாழ்ந்திருப்பாள் என்று மாமல்லரால் கற்பனை செய்யவே முடியவில்லை. அந்த எண்ணம் அவர் மனதில் ஒரு கணமும் இடம் பெறவில்லை.

சிறைப்பட்டுச் சிறிது நேரத்துக்கெல்லாம் அவள் பிராணனை விட்டுத்தான் இருக்கவேண்டும். கேவலம் மற்ற சாமான்யப் பெண்களைப்போல் அவள் சத்துருக்கள் வசம் சிக்கிக் கொண்ட பிறகு உயிரை வைத்துக் கொண்டிருப்பாளா? மானத்தைக் காட்டிலும் பிராணனே பெரிது என்று எண்ணும் ஈனத்தனம் அவளிடம் இருக்கமுடியுமா? ஒரு நாளும் இல்லை.

தன்னுடைய வாழ்க்கையிலிருந்தும் இந்த உலகத்திலிருந்தும் அந்தத் தெய்விக ஒளிச் சுடர் முடிவாக மறைந்தே போய் விட்டது. அப்பேர்ப்பட்ட சௌந்தரியத்துக்கும் கலைத் திறனுக்கும் குண மேன்மைக்கும் இந்த உலகம் தகுதியற்றது; தானும் தகுதியற்றவன்தான்.

திருவெண்காட்டில் திருநாவுக்கரசர் பெருமான் கவலையுடன் கூறிய மொழிகள் மாமல்லருக்கு ஞாபகம் வந்தன. காஞ்சிமா நகரின் சைவத் திருமடத்தில் சிவகாமியின் அற்புத நடனத்தைப் பார்த்த அன்றைக்கே அப்பெரியார் ஆயனரிடத்தில் தமது கவலையைத் தெரிவித்திருந்தார். "ஐயோ! அந்த மகா புருஷரின் எச்

சரிக்கையை மதியாமற் போனேனே!'' என்று ஆயனர் கதறிய மொழிகள் மாமல்லருடைய செவிகளில் இன்னும் சுழன்று கொண்டிருந்தன.

ஆ! என்ன கதறி என்ன பிரயோஜனம்?

இரண்டு தந்தைமார்களுமாய்ச் சேர்ந்து சிவகாமியின் உயிருக்கு இறுதி தேடி விட்டார்கள். தன்னுடைய வாழ்வுக்கும் உலை வைத்து விட்டார்கள்.

ஆனபோதிலும், அவர்கள் மீது மாமல்லர் அதிகமாகக் கோபங் கொள்ள முடியவில்லை.

மகளைப் பிரிந்த துயரத்தினால் ஆயனர் ஏறக்குறையச் சித்தப்பிரமை கொண்ட நிலையில் இருக்கிறார். கால் முறிந்து எழுந்து நிற்கவும் முடியாமல் கிடந்த இடத்திலேயே கிடக்கிறார். அவர் மேல் எப்படிக் கோபம் கொள்வது?

அல்லது, போர்க் களத்திலே படுகாயம் அடைந்து யமனுடன் போராடிக் கொண்டிருக்கும் மகேந்திர பல்லவரிடந்தான் எவ்விதம் கோபம் கொள்ள முடியும்?

மேலும், அவர்கள் என்ன செய்வார்கள்? விதியைத் தடுக்க யாரால் ஆகும்? விதி இவ்விதம் இருக்கக் கொண்டுதானே திருநாவுக்கரசரின் திருவுள்ளத்தில் அத்தகைய கவலை உதயமாயிற்று?

சிவகாமி இல்லாத உலகத்தில் தாம் உயிர் வாழ்வது என்னும் எண்ணத்தை மாமல்லரால் சகிக்கவே முடியவில்லை. ஆம்; சில காலம் எப்படியும் பல்லைக் கடித்துக்கொண்டு ஜீவித்திருக்கத்தான்வேண்டும். நராதமர்களும், நம்பிக்கைத் துரோகிகளும், மனித உருக்கொண்ட ராட்சதர்களுமான வாதாபி சளுக்கர்களைப் பழி வாங்குவதற்காகத்தான்!

பழி வாங்குவதென்றால் எப்படி? இதுவரையில் இந்த உலகமானது கண்டும் கேட்டுமிராத முறையிலே பழி வாங்க வேண்டும்! சளுக்கர்கள் தொண்டை நாட்டில் செய்திருக்கும் அக்கிரமங்களுக்கு ஒன்றுக்குப் பத்து மடங்காக அவர்களுக்குச் செய்ய வேண்டும். சளுக்க நாட்டில் இரத்த ஆறுகள் ஓட வேண்டும். பெருகி ஓடும் செங்குருதி நதிகளில், பற்றி எரியும் பட்டணங்களின் மீது கிளம்பும் அக்னி ஜுவாலைகள் பிரதிபலிக்க வேண்டும்! அந்த நீசர்களின் நாட்டிலே அப்போது எழும் புலம்பல் ஒலியானது தலைமுறை தலைமுறையாகக் கேட்க வேண்டும்!

இவ்விதம் பழி வாங்குவதைப் பற்றி எண்ணியபோதெல்லாம் மாமல்லருக்குச் சிறிது உற்சாகம் உண்டாயிற்று. அடுத்த கணத்தில் 'சிவகாமி இவ்வுலகில் இப்போதில்லை; அவளை இனிமேல் பார்க்கவே முடியாது' என்ற எண்ணம் தோன்றியதும் உற்சாகம் பறந்து போய்ச் சொல்ல முடியாத சோர்வு குடிகொண்டது. உடம்பின் நரம்புகள் எல்லாம் தளர்ந்து சகல நாடிகளும் ஒடுங்கிக் குதிரையின் கடிவாளங்கள் கையிலிருந்து நழுவும் படியான நிலைமையை அடைந்தார்.

அந்த மனச்சோர்வைப் போக்கிக் கொள்வதற்காக மாமல்லர் பழைய ஞாபகங்களில் தம்முடைய மனதைச் செலுத்த முயன்றார்.

சென்ற மூன்று நாலு வருஷத்தில் சிவகாமிக்கும் தமக்கும் ஏற்பட்டிருந்த தொடர்பை நினைத்தபோது மாமல்லரின் இருதய அடிவாரத்திலிருந்து பந்து போன்ற ஒரு பொருள் கிளம்பி மேலே சென்று தொண்டையை அடைத்துக் கொண்டது போலிருந்தது. கண்களின் வழியாகக் கண்ணீர் வருவதற்குரிய மார்க்கங்களையும் அது அடைத்துக் கொண்டு திக்கு முக்காடச் செய்தது.

ஆஹா! உலகத்தில் அன்பு என்றும், காதல் என்றும், ப்ரேமை என்றும் சொல்கிறார்களே! சிவகாமிக்கும் தமக்கும் ஏற்பட்டிருந்த மனத் தொடர்பைக் குறிப்பிடுவதற்கு இவையெல்லாம் எவ்வளவு தகுதியற்ற வார்த்தைகள்?

தளபதி பரஞ்சோதியும் அந்தத் திருவெண்காட்டுப் பெண்ணும கொண்டுள்ள தொடர்பைக்கூட அன்பு, காதல், பிரேமை என்றுதான் உலகம் சொல்கிறது: ஆனால் பரஞ்சோதியின் அனுபவத்துக்கும் தம்முடைய அனுபவத்துக்கும் எத்தனை வித்தியாசம்?

பரஞ்சோதி சேர்க்காற்போல் பல தினங்கள் உமையாளைப் பற்றி நினைப்பது கூட இல்லை என்பதை மாமல்லர் அறிந்திருந்தார். ஆனால், அவருடைய உள்ளத்திலிருந்து சென்ற நாலு வருஷ காலத்தில் ஒரு கண நேரமாவது சிவகாமி அப்பால் பட்டதுண்டா? கிடையவே கிடையாது.

கேணியில் உள்ள தண்ணீரை இறைத்து விட்டால், அடியில் உள்ள நீர் ஊற்றிலிருந்து குபு, குபு வென்று தண்ணீர் மேலே வருமல்லவா? அதே மாதிரியாக மாமல்லரின் இருதயமாகிய ஊற்றிலிருந்து சிவகாமியின் உருவம் இடைவிடாமல் மேலே வந்துகொண்டிருந்தது. ஆயிரமாயிரம் சிவகாமிகள் நெஞ்சின் ஆழத்திலிருந்து கிளம்பி மேலே மேலே வந்து மறைந்து போய்க் கொண்டேயிருப்பார்கள்.

முகத்தில் புன்னகை பூத்த சிவகாமி, கலீரென்று சிரிக்கும் சிவகாமி, புருவம் நெரிந்த சிவகாமி, சோகம் கொண்ட சிவகாமி, பயத்துடன் வெருண்டு பார்க்கும் சிவகாமி, கண்ணீர் ததும்பிய கண்களினால் கனிவுடன் பார்க்கும் சிவகாமி, கண்களைப் பாதி மூடி ஆனந்த பரவசத்திலிருக்கும் சிவகாமி, வம்புச் சண்டைக்கு இழுக்கும் விளையாட்டுக் கோபங் கொண்ட சிவகாமி — இப்படியாக எத்தனை எத்தனையோ சிவகாமிகள் மாமல்லரின் உள்ளத்தில் உதயமாகிக் கொண்டேயிருப்பார்கள்.

தாய் தந்தையரோடு பேசிக்கொண்டிருக்கும் போதும், இராஜரீக விவகாரங்களைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருக்கும்போதும், புரவியின் மீது அதிவேகமாகப் போய்க்கொண்டிருக்கும்போதும், இராஜ சபையில் வீற்றிருந்து ஆடல் பாடல் விநோதங்களைக் கண்டு கேட்டுக் களித்துக் கொண்டிருக்கும் போதும், போர்க்களத்தில் வாள்களும் வேல்களும் நாலாபுறமும் ஒளி வீசி ஒலி செய்ய எதிரி சைன்யங்களுடன் வீரப் போர் புரிந்து அவர்களை விரட்டியடிக்கும் போதும், எப்படியோ மாமல்லரின் உள்ளத்தின் அடிவாரத்தில் சிவகாமியின் நினைவு மட்டும் இருந்து கொண்டுதானிருக்கும்.

பகல் வேளையில் பல்வேறு காரியங்களில் ஈடுபட்டிருக்கும் போதுதான் இப்படியென்றால், இரவு நேரங்களில் சொல்ல வேண்டியதில்லை.

காஞ்சி நகரில் அரண்மனையில் தங்கும் நாட்களில் இரவு போஜனம் முடிந்து தாம் தன்னந் தனியாகப் படுக்கைக்குப் போகும் நேரத்தை எப்போதும் மாமல்லர் ஆவலுடன் எதிர் நோக்குவது வழக்கம். ஏனெனில், மற்றக் காரியங்களிலிருந் தெல்லாம் மனத்தைத் திருப்பிக்கொண்டு சிவகாமியைப் பற்றிய நினைவுகளிலேயே அவருடைய உள்ளத்தைப் பூரணமாக ஈடுபடுத்தலாமல்லவா? கருவண்டையொத்த அவளுடைய கண்களையும், அந்தக் கண்களின் கருவிழிகளைச் சுழற்றி அவள் பொய்க் கோபத்துடன் தன்னைப் பார்க்கும் தோற்றத்தையும் நினைத்து நினைத்துப் போதை கொள்ளலாமல்லவா?

இப்படி நெடு நேரம் — எல்லையற்ற இன்ப யுகமாகத் தோன்றிய நேரம்—சிவகாமியைப் பற்றி எண்ணமிட்டுக் கொண்டிருந்த பிறகு கடைசியில் கண்களை மூடித் தூங்கினால், தூக்கத்திலும் அவளைப் பற்றிய கனவுதான். எத்தனை விதவிதமான கனவுகள்? அந்தக் கனவுகளில் எத்தனை ஆனந்தங்கள்? எத்தனை துக்கங்கள்? எத்தனை அபாயங்கள்? எத்தனை ஏமாற்றங்கள்?

கனவுகளிலே என்னவெல்லாமோ ஆபத்துகள் சிவகாமிக்கு ஏற்பட்டதும், அவற்றிலிருந்து அவளைத் தப்புவிக்கத் தாம் முயன்றதும், சில சமயம் அவளைத் தப்புவிப்பதற்கு முன்னாலேயே கனவு கலைந்து எழுந்து மீதி இரவெல்லாம் கவலைப்பட்டுக் கொண்டிருந்ததும், மறு நாள் விரைந்து சென்று சிவகாமிக்கு ஒன்றுமில்லை என்று தெரிந்து கொண்டு ஆறுதல் அடைந்ததும் மாமல்லருக்கு இப்போது நினைவுக்கு வந்தன. ஐயோ! அந்தப் பயங்கரமான கனவுகள் இப்போது உண்மையாகி விட்டன! சிவகாமிக்கு நிஜமாகவே ஆபத்து வந்த சமயத்தில் தான் அருகிலிருந்து அவளைக் காப்பாற்ற முடியாமற் போய்விட்டது.

ஆஹா! அந்தப் பேதையின் உள்ளத்தில் இப்படி ஒரு பெரும் ஆபத்து தனக்கு வரப்போகிறது என்பது எப்

படியோ தோன்றியிருக்க வேண்டும். இது காரணமாகத்தான் அவள் தன்னிடம் அடிக்கடி "என்னை மறக்க மாட்டீர்கள் அல்லவா?" என்றும், "என்னைக் கைவிட மாட்டீர்கள் அல்லவா?" என்றும் கேட்டுக் கொண்டிருந்தாள். அப்போதெல்லாம் "இதென்ன அர்த்தமற்ற கேள்வி?" என்று மாமல்லர் அலட்சியமாகத் திருப்பிக் கேட்பது வழக்கம். ஆ! உண்மையில் அது எவ்வளவு அர்த்தபுஷ்டியுள்ள கேள்வி?

சிவகாமி! என் கண்ணே! உன்னை மறக்கமாட்டேன்! இந்த ஜன்மத்தில் உன்னை மறக்கமாட்டேன்! எந்த ஜன்மத்திலும் மறக்கமாட்டேன். உன்னை என்னிடமிருந்து பிரித்த பாதகர்கள் மேல் முதலில் பழி வாங்குவேன்! அதற்குப் பிறகு உன்னைத் தேடிக் கொண்டு வருவேன். யமன் உலகத்துக்கு உன்னைத் தொடர்ந்து வந்து தர்மராஜாவிடம் "எங்கே என் சிவகாமி?" என்று கேட்பேன். சொர்க்க லோகத்திற்குச் சென்று தேவேந்திரனிடம், "என் சிவகாமி எங்கே? ரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமை ஆகிய நாலு பேர் உங்களுக்கு இருக்கிறார்கள். எனக்கோ சிவகாமி ஒருத்திதான் இருக்கிறாள்! அவளைக் கொடுத்து விடுங்கள்!" என்று கேட்பேன்.

சிவகாமி! சொர்க்க லோகத்தில் நீ இல்லாவிட்டால் அதோடு உன்னை விட்டுவிட மாட்டேன். சத்திய லோகம், வைகுண்டம், கைலாசம் — எங்கே நீ இருந்தாலும் உன்னைத் தேடி வந்து கண்டு பிடிப்பேன். அப்புறம், திரிமூர்த்திகளாலும் உன்னை என்னிடமிருந்து பிரிக்க முடியாது!

வருகிறேன், சிவகாமி. வருகிறேன்! சீக்கிரத்தில் வருகிறேன்!

## அத்தியாயம் 34

# இந்தப் பெண் யார்?

காஞ்சிமா நகரம் இதற்கு முன் எந்த நாளிலும் கண்டிராத அமைதியுடன் விளங்கிற்று.

பெரிய பயங்கரமான புயல் அடித்து ஓய்ந்த பிறகு ஏற்படும் அமைதியை அது ஒத்திருந்தது.

கோட்டைக் கதவுகள் இன்னும் திறந்துவிடப் படாமையால் ஒருவிதத்தில இன்னும் முற்றுகைக்கு உட்பட்ட நகரம் போலவே இருந்தது. ஆனால், வெளியில் பகைவர்கள் இல்லையாதலின், உள்ளே அவர்களை எதிர்ப்பதற்குரிய ஆயத்தங்களும் நடைபெறவில்லை. எனவே, நகரில் கலகலப்பு மிகவும் குறைவாயிருந்தது.

நகர வாசிகளின் மன நிலைமையும் அதற்கேற்றபடிதான் இருந்தது.

வாதாபிப் படைகள் தொண்டை நாட்டில் சொல்லொணாத அட்டூழியங்களைச் செய்து விட்டுப் பின்வாங்கிச் சென்றது பற்றியும், மணிமங்கலத்திலும் சூரமாரத்திலும் நடந்த போர்களைப் பற்றியும் காஞ்சி நகர் வாசிகளுக்கு அரைகுறையான விவரங்கள் கிடைத்திருந்தன. மகேந்திர பல்லவ சக்கரவர்த்தி மணிமங்கலம் போர்க்களத்தில் அடைந்த காயங்களினால் யமன் உலகை எட்டிப் பார்த்துக் கொண்டிருப்பதும், அவரைப் பிழைப்பிக்க அரண்மனை வைத்தியர்கள் பிரம்மப் பிரயத்தனம் செய்து கொண்டிருப்பதும் காஞ்சி மக்களுக்குத் தெரிந்திருந்தபடியால், எந்த நிமிஷத்திலும் அவர்கள் "சக்கரவர்த்தி காலமானார்" என்னும் துக்கச் செய்தியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

எல்லாவற்றைக் காட்டிலும் அவர்களுக்கு அதிகமான மனச் சோர்வை அளித்த விஷயம் ஆயனருக்கும் அவருடைய மகளுக்கும் நேர்ந்த கதியைப் பற்றியதுதான். மணிமங்கலம் போர்க்களத்திலிருந்து திரும்பி வந்த வீரர்களின் மூலம் ஆயனருடைய கால் முறிந்த செய்தியையும் சிவகாமி சளுக்கர்களால் சிறைப் பிடித்துக் கொண்டு போகப்பட்ட விவரத்தையும் காஞ்சி மக்கள் கேள்விப்பட்டிருந்தார்கள்.

இந்தச் சம்பவம் அவர்களுக்கு எல்லாவற்றிலும் அதிக வேதனையை அளித்திருந்ததுடன் மகேந்திர பல்லவரிடம் அவர்களுக்கிருந்த மரியாதையை ரொம்பவும் குறைத்திருந்தது.

இத்தகைய காரணங்களினால், காஞ்சி நகரம் களை யற்று, கலகலப்பற்று, சோபிசமற்று, அசாதாரணமான அமைதி குடிகொண்டு விளங்கிற்று.

நகரத்திலேயே இப்படி என்றால், சக்கரவர்த்தியின் அரண்மனைக்குள்ளே கேட்க வேண்டியதில்லை.

புவனமகாதேவி மகேந்திர பல்லவரை மணந்து காஞ்சி அரண்மனைக்குள்ளே கால்வைத்த நாளிலிருந்து, அந்த அரண்மனை ஒருகாலத்திலும் இம்மாதிரி கலகலப்பற்றும் பிரகாசமில்லாமலும் பேய் குடிகொண்ட பழைய மாளிகையைப்போல தோற்றமளித்தது கிடையாது.

காஞ்சி நகரம் முற்றுகை யிடப்பட்டிருந்த காலத்திலேகூட அந்த அரண்மனையில் வேளா வேளைகளில் கீத வாத்தியங்களின் ஒலியும், பேரிகை முரசங்களின் சத்தமும், சங்கநாதமும், ஆலாட்ச மணிகளின் சத்தமும் கேட்டுக் கொண்டுதா னிருந்தது.

இவற்றுடன் அரண்மனைத் தாதிப் பெண்கள் கால்களில் அணிந்திருந்த பாதசரங்களின் கிண் கிணி ஓசை இடைவிடாமல் கேட்டுக்கொண்டிருக்கும். வேத மந்திரங்களின் கோஷமும், செந்தமிழ்ப் பாடல்களின் கீத நாதமும் அவ்வப்போது கேட்கும்.

அரண்மனை முன் வாசல் முற்றத்தில் வந்துபோகும் குதிரைகளின் காலடிச் சத்தம் சதா கேட்டுக் கொண்டிருக்கும்.

இப்படி யெல்லா மிருந்த அரண்மனையில் இப்போது ஆழ்ந்த மௌனம் — என்னமோ ஏதோ என்று பீதியை உண்டாக்கிய பயங்கர மௌனம், — குடிகொண்டிருந்தது.

* * *

மணிமங்கலம் போர்க்களத்திலிருந்து மகேந்திர பல்லவரை எடுத்து வந்து அரண்மனையில் சேர்த்த பிறகு, இராஜ வைத்தியர்கள் அல்லும் பகலும் அவர் பக்கத்தில் இருந்து சிகிச்சை செய்து வந்தார்கள்.

மணிமங்கலத்தில் அன்றைக்கு மாமல்லரைக் கண் திறந்து பார்த்து, "மகனே! என்னை மன்னிப்பாயா?" என்று கேட்ட பிறகு, மகேந்திர பல்லவர் பலநாள் நினைவற்ற நிலையிலேயே இருந்தார்.

சூரமாரம் போர்க்களத்திலிருந்து மாமல்லர் திரும்பி வந்த பிறகு கூடச் சக்கரவர்த்திக்குச் சுய நினைவு இல்லாமல்தா னிருந்தது.

அப்புறம் கொஞ்சம் கொஞ்சமாகக் கண் விழித்துப் பார்க்கவும், தம் எதிரிலுள்ளவர்களைத் தெரிந்து கொள்ளவும் ஆரம்பித்தார்.

இனிமேல் சக்கரவர்த்தி கட்டாயம் பிழைத்துக் கொள்வார் என்றும், ஆனால் இன்னும் சிலகாலம் அவரைக் கவலையுடன் பார்த்துக் கொள்ள வேண்டும் என்றும் வைத்தியர்கள் சொன்னார்கள்.

மாமல்லரைப் பார்க்கும்போதெல்லாம் மகேந்திரருக்கு உணர்ச்சி அதிகமாகி அவருடன் பேசுவதற்கு முயன்றபடியால் இன்னும் சில நாள் மாமல்லர் தந்தையிடம் அதிகமாகப் போகாம லிருப்பதே நல்லதென்று வைத்தியர்கள் அபிப்பிராயப்பட்டார்கள்.

இதனால் மாமல்லரின் மனவேதனையும் அமைதிக் குறைவும் அதிகமாயின. அவர் மனம் விட்டுப் பேசுவதற்கும் அரண்மனையில் யாரும் இல்லை.

தளபதி பரஞ்சோதி மந்திரி மண்டலத்தாரின் ஆலோசனையின் பேரில் சேனைகளை அழைத்துக் கொண்டு கோட்டைக்கு வெளியே சென்று, வாதாபிப் படையால் இம்சிக்கப்பட்ட கிராமவாசிகளுக்கு உதவி செய்வதில் ஈடுபட்டிருந்தார்.

புவனமகாதேவியோ எப்போதும் கண்ணீரும் கம்பலையுமா யிருந்தாள். மாமல்லரோடு தனியாக இருக்க நேரும்போதெல்லாம் சக்கரவர்த்தினியின் துயரம் அதிகமாயிற்று. புலிகேசியை நகருக்குள் அழைப்பதால் கெடுதல்தான் விளையும் என்று தான் முன்னாலேயே எச்சரித்ததை இப்போது சொல்லிச் சொல்லி வருந்தி



குளம் ஞாபகம் வந்தது. தானும் சிவகாமியும் எத்தனையோ ஆனந்தமான நாட்களைக் கழித்த இடம், — பரஸ்பரம் எத்தனையோ அன்பு மொழிகளைக் கூறிப் பரவசமடைந்த இடம், — அப்பேர்ப் பட்ட குளக் கரையைப் பார்க்கவேண்டுமென்று ஆசை உண்டாயிற்று.

எனவே, பாதையை விட்டுச் சிறிது விலகித் தாமரைக் குளக்கரையை நோக்கிக் குதிரையை மெதுவாகச் செலுத்தினார்.

சற்றுத் தூரம் போனதும் அந்தக் காட்டு வழியில் எதிரே பெண் ஒருத்தி வருவது தெரிந்தது. மாமல்லர் வருவது கண்டு திடுக்கிட்ட முகத் தோற்றத்துடன் அவள் ஒதுங்கி நின்றாள். மாமல்லர் தமது பரம்பரையான குலப்பண்பாட்டுக்கு உகந்தபடி அவளுடைய முகத்தை இரண்டாவது தடவை ஏறிட்டுப் பாராமல் தம் வழியே சென்றார்.

ஆனால், சற்றுத் தூரம் சென்றதும், அந்த ஸ்திரீயின் முகம் ஏதோ ஏற்கெனவே பார்த்திருந்த முகம்போல் ஞாபகத்துக்கு வந்தது.

“அந்தப் பெண் யார்? அவளை எங்கே பார்த்திருக்கிறோம்?” என்று எண்ணமிட்டுக் கொண்டே மாமல்லர் தாமரைக் குளத்தை அடைந்தார்.

# ஸிப்ளாக்

சிறைவாசத்தினால் உடல் வலம் குறைந்தும், உற்சாகம் குன்றாத ஜவாஹர்லால் நேரு, மேளாவில் மச்ச பூமியில் நின்ற வீர கர்ஜனை புரிகிறார்.



காங்கிரஸ் மகாசபையின் பொறுப்பு முழுவதையும் தம் தோள்மீது சுமந்து கொண்டிருப்பதோடன்றி, தடித்த கம்பளிச் சட்டையையும் சுமந்து கொண்டிருக்கும் காங்கிரஸ் அக்கிராசனாதிபதி மௌலானா அபுல் கலாம் ஆஸாத்.

போட்டோ:

# காட்சிகள்

பிரசங்கம் முடிந்து விட்டது. இதோ ஜவாஹர் லால்ஜி மரக் கைப்பிடிச் சுவரை ஒரே தாண்டாகத் தாண்டிக் குதிக்கிறார்!



வேவல் திட்டத்துக்கு மூல காரண புருஷரான ஸ்ரீ புலாபாய்தேசாய் வெகு அமுசதலாக அங்கு மிங்கும் போகிறார். பக்க பலமாக நிற்பவர் மத்திய மாகாண மாஜிப் பிரதமர் பண்டித வி[illegible]ர் சுக்லா.

கே. நடராஜன்.



# வான சஞ்சாரம்

இசைத்தேனீ

சென்னை திருச்சி இரண்டு ரேடியோ நிலையங்களுக்கும், சென்ற வாரத்தில் பல கச்சேரிகள் உயர்தரமாய் அமைந்தது விசேஷயோகம். 6உ. சென்னையின் மூன்றாவது ஒலிபரப்பில், இரவு 9—30 லிருந்து ஒரு மணி நேரம் கேட்ட எஸ். ராஜம் ஸீனியரா அல்லது இளம்பாடகரா என்று தெரியவில்லை. பாடிய மட்டும், அரிய ஞானமும், சாதகமும், அநுபவமும் கொண்டவர்போல் தோன்றியது. சாரீரம் கணீர் என்று கேட்கும் மணி நாத வகையாயில்லாவிடினும், காந்திரமும், நயமும் சேர்ந்து வாத்யங்களின் மந்தரத் தந்தியிலிருந்து இழைந்து எழும் ஒலிபோல் 'ஜும்' என்று ரஞ்சகமாய்க் காதை நிரப்பியது. சுருதி சுத்தம்; இழைப்பு மிகுந்த சஞ்சாரங்கள்; பிகுவான பாணி; ராகஸ்வரூபங்களில் தெளிவு; சாஹித்யம் ஸ்வரங்களில் தெளிவுடன் மிருதுவான உச்சரிப்பு; வேறென்ன வேண்டும்? வராளிக்கும் பந்துவராளிக்கும் வித்யாசம் தெரியாமலே பாடும் இக்காலத்தில், அவர் வடுப்படாத வராளியுடன் தொடங்கி 'நோரேமி' உருப்படியை ராகபாவம் ததும்பப் பாடிய வழி மனதைக் கவர்ந்தது. மொத்தத்தில் உயர்ந்த சங்கீதத்திலிருந்து எதிர்பார்க்கப்படும் அபூர்வ விச்ராந்தி உணர்ச்சியை அவர் பாட்டு அன்று கொடுத்தது.

அதே நிலையத்தில் அன்றுமாலை கனக்காடு ராமநாராயணய்யர் ஷண்முகப்பிரியாவை ராகம் தானம் பல்லவிக்கு எடுத்துக்கொண்டு மணிநாதம் போன்ற குரலில் நேர்த்தியாய்க் கச்சேரி செய்தார். கீழ் ஸ்தாயியிலிருந்து படிப்படியாய்ச் சஞ்சாரங்களை அடுக்கி மேலே போய்ப் பலவித சாதக முறையில் முத்து முத்தாய்ப் பிடிகளை வாரி வீசினார். தானத்தைத் தெளிவாய் இரண்டு காலத்திலும் வழங்கினார். ஸ்வரம் பாடும் முறை ரசமாயிருந்தது. அன்று கோவிந்தசாமி நாயக்கரின் வயலினும் விமரிசையாயிருந்தது.

7உ. சென்னையில் பாடிய சித்தூர் சுப்ரமணியப் பிள்ளைக்குச் சாரீரம் வெகு நன்றாய் வாய்த்தது. பிறகு கச்சேரியும் அப்படியே அமைந்தது என்று சொல்லத் தேவையில்லை. கல்யாணி, பைரவி இரண்டு ராகங்களைத் தாராளமாய்ப் பாடினார். கல்யாணியில் 'ஏதாவுனரா' கிருதி வெகு நேர்த்தியாயிருந்தது.

8உ. திருச்சியில் பாடிய சாத்தூர் எஸ். என். கிருஷ்ணய்யங்கார் ஞானச் சிறப்புக்கொண்ட ஸீனியர் வித்வான். சாரீரம் கட்டையாயினும், கனம் கொண்டது. மேலே பாடும் போது சிறிது கஷ்டப்படுவதுபோல் தோன்றும் ஆனால் சாதகபலத்தினாலும், முதிர்ந்த அநுபவத்தினாலும் எதையும் நல்ல பாணியுடன் ஸ்வரமாய்க் கையாளும் திறம் கொண்டவர். அன்று காமாஸ், கல்யாணி, சாவேரி, ஸஹானா ராகங்களை அழகுபட வழங்கினார். 'பிராணவர' கிருதியில் நிரவல் ஸ்வரங்கள் ஜோராயிருந்தன.

5உ. திருச்சியில் கேட்ட சீர்காழி கே. சதாசிவம் பிள்ளையின் கச்சேரியும் ஞானபாவ ரசத்தைச் சேர்ந்தது. சாரீரம் கட்டையாயினும் நல்ல உதவுபடியுள்ளது. ஸ்ரீரஞ்சனி, மோஹனம், சங்கராபரணம், கல்யாணி ராகங்களில் நல்ல வேலைப்பாடுகளைக் காட்டினார். 'தூக்கிய திருவடி'யில் நிரவல் ஸ்வரங்கள் ஜோராயிருந்தன. கல்யாணியில் எடுத்த பல்லவி சுமாராயிருந்தது.

சோமசுந்தரம் பாட்டு என்றாலே ரசிகர்களிடம் குதூகலம் ஏற்படும். சென்னையில் 3உ. நடந்த அவர் கச்சேரி வழக்கம் போல் உத்ஸாகமளித்தது. நயமான குரல், அபூர்வ உதவுபடி! கேட்பானேன்? ஒரே பிர்க்கா வெள்ளத்தில் கேட்போரை மூழ்க அடித்தார். ஆனால் எவ்வளவு வேகமாய்ப் பிர்க்கா அடித்தாலும் தேசல் விழுவதில்லை. ஜகன்மோஹினி கல்யாணி ராகங்களோடு ஒரு ராகமாலிகையையும் விருவிருப்பாய் வழங்கினார்.

8உ. சென்னையில் கேட்ட விஞ்சமூர் வரதராஜ ஐயங்காரின் கச்சேரியும் உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தது. நல்ல ஞானமும் உழைப்பும் கொண்டு முன்னுக்கு வந்து கொண்டிருக்கும் இளம் வித்வான்களில் ஒருவர். தர்பார், சங்கராபரணம் ராகங்கள் நேர்த்தியாயிருந்தன. சங்கராபரண உருப்படியில் நிரவல் ஸ்வரங்கள் விருவிருப்பாயிருந்தன. இவருக்கிருக்கும் சாரீர உதவியையும் ஞானத்தையும் கவனிக்கும்போது, இன்னும் கொஞ்சம் அழுத்தமாய்ப் பாடிப் பாணியை ஸ்திரப்படுத்திக் கொள்வாரானால் பாட்டு இன்னும் மேம்படும்.

4உ. கச்சேரிகளில் சென்னையில் கேட்ட ருக்மிணி வாசுதேவனது குறிப்பிடத் தக்கது. நயமான குரல். திறமையும் தன் தைரியமும் கொண்டு எதையும் சுகபாவத்துடன் பாடும் இயல்புடையவர். அன்று பைரவி, பேகடா, பிலஹரி ராகங்களை ரொம்ப நாஸுக்காய்க் கையாண்டார். நிரவல் ஸ்வரங்களும் வளப்பமாயிருந்தன. கடைசியில் பாடிய 'தாரிகூக' பதத்தில் அவரது பாடாந்தரமும் வழியும் வித்தியாசப்பட்டன.

5உ. சென்னையில் பிற்பகலில் பி. பாலகிருஷ்ண பிள்ளைக்குப் பதிலாக வேங்கடராமானுஜம் வாசித்த வயலினும் டி. ஏ. வேங்கடராமய்யர் பாட்டும் குறிப்பிடத் தக்கவை. முன்னவரின் முகாரி மணிரங்கு ராகங்கள் வளப்பமாயிருந்தன. பின்னவரின் ஆனந்தபைரவி ஆனந்தமாகவே யிருந்தது. அது தவிர நாட்டக்குரஞ்சி, மத்யமாவதி, பூர்விகல்யாணி, கீரவாணி என்று ராகங்களைச் சரமாரியாய்ப் பொழிந்தார்.

7உ. திருச்சியில் திருப்பாப்புலியூர் வி. ராஜமய்யரின் வயலின் கச்சேரி கவனத்தை யிழுத்தது. நன்யாசி, தேவமனோஹரி, தர்பார், வாசஸ்பதி ராகங்களை வழங்கினார்.

திருச்சியில் 6உ. எஸ். ஆர். கிருஷ்ணமூர்த்தி, ஜி. குஞ்சிதபாதம் இவர்களும், 9உ. கீரனூர் என். வைத்யநாதன் பிள்ளை, என். கோவிந்தசாமிப்பிள்ளை இவர்களும் நடத்திய நாதஸ்வரக் கச்சேரிகள் கர்ணாமிருதமாயிருந்தன. முதல் கோஷ்டியின் தர்மவதியும் இரண்டாவது கோஷ்டியின் சாலகபைரவி [illegible] ராகங்களும் ஞானபாவச் சிறப்புடன் அழகு வடிவங்களாயிலங்கின.

# தாம்பத்தில்

# இன்பம்

வி. ஆர். ராமசாமி



கிருஷ்ணமாச்சாரியார் தம் குமாரன் சாரங்கபாணியைப் பார்த்துச் சோகம் நிறைந்த குரலில் சொல்லலானார்:—

"எனக்கு உடம்பு கெட்டுக்கொண்டு வருகிறது. இனிமேல் இந்த வக்கீல் தொழிலை முன்மாதிரி உற்சாகத்துடனும் கவனத்துடனும் நடத்த முடியுமென்று தோன்றவில்லை. உன்னை ஏதாவது ஒரு வேலையில் சேர்க்க வைத்து, நீ சுகமாய் இருக்கவேண்டுமென்பது எனது எண்ணம். நான் கவர்ன்மெண்ட் வக்கீலுக்குச் சொல்லியிருக்கிறேன். அவர் கலெக்டருக்குச் சொல்லி உனக்குக் கலெக்டர் ஆபீஸில் சுற்றுப் பிரயாணக் குமாஸ்தா வேலை செய்து கொடுக்கச் சொல்லியிருக்கிறார். உனக்குக் கலியாணத்திற்கும் ஏற்பாடு செய்து வருகிறேன். உன்னுடைய ஜாதகத்தையும் போட்டோவையும் என் நண்பர் ஒருவருக்கு அனுப்பியிருக்கிறேன். உன் தங்கை பத்மாவுக்கும் கலியாணம் செய்ய வேண்டும். நீ வேலையில் சேர்ந்தால் எல்லாவற்றிற்கும் சௌகரியமாயிருக்கும்" என்றார்.

சாரங்கபாணி, "அப்பா, நான் ஏதாவது சம்பாதித்தபின்தான் கலியாணம் செய்துகொள்வதாகத் தீர்மானித்து விட்டேன். நீங்கள் தயவுசெய்து பெண் வீட்டாருக்கு நான் இப்பொழுது விவாகம் செய்துகொள்ளப் போவதில்லையென்று எழுதி விடுங்கள்!" என்றான்.

கிருஷ்ணமாச்சாரி, "கலியாணப் பேச்சை நீ படித்த கதைகளிலிருப்பதைப் போல் நடத்த முடியுமா? நிதானமாய் யோசித்துச் சொல்" என்றார்.

இதற்குள் தபால்காரன் வந்து கடிதங்களைக் கொடுத்துவிட்டுப் போனான். ஒரு கடிதத்தில் மஞ்சள் பூசியிருப்பதைக் கண்டு கிருஷ்ணமாச்சாரியார் அதை முதலில் திறந்து படித்தார். சாரங்கபாணியைப் பார்த்து, "உன் இஷ்டம் ஜயித்தது. நரசிம்மாச்சாரியார் தேக நிலை சரியாயில்லாததால் இப்போது தம் மகளுக்கு விவாகம் செய்து முடிக்க அனுகூலமில்லையென்று எழுதி விட்டார்" என்றார்.

சாரங்கபாணி, "அதைப்பற்றி விசனப்பட வேண்டாம். நான் சென்னைக்கு வேலை தேடப் போகிறேன். என்னுடன் கூடப் படித்தவர்களைப் பிடித்து ஏதாவது வேலை சம்பாதித்துக் கொள்கிறேன். பத்மாவுக்கும் ஏதாவது நல்ல வரன் கிடைத்தால் எழுதுகிறேன்" என்றான்.

"உன் சாமர்த்தியத்தில் உனக்கு அளவற்ற நம்பிக்கையிருப்பதுபோல் தோன்றுகிறது. அதனால் கையில் கிடைத்ததை விட்டுவிட்டு எட்டாததற்கு ஏணி போடுகிறாய்!" என்று கொஞ்சம் சிரித்தவண்ணம் சொன்னார்.

கிருஷ்ணமாச்சாரியார் கும்பகோணத்தில் ஒரு வக்கீல். வரும்படி சுமாராயிருந்தும் சற்று தாராளமாய்ச் செலவு செய்து வந்தார். அவர் இன்ஷ்யூரன்ஸ் செய்து கொள்ளுகையில் டாக்டர் நீரை பரீட்சை செய்து பார்த்து அதில் சர்க்கரை இருப்பதாகச் சொன்னார். பலஹீனமேற்பட்டதாலும், டாக்டரின் எச்சரிக்கையாலும் சற்று மனத்தளர்ச்சியடைந்திருந்தார். ஆனால் பிள்ளையின் உற்சாகமும் தைரியமும் அவருக்குச் சிறிது ஆறுதலைத் தந்தது. பையனின் உத்தியோக வேட்டைச்



செலவிற்கு அவன் கையில் நூறு ரூபாய் தந்தார். சாரங்கபாணி தகப்பனுக்குத் தைரியத்தை உண்டு பண்ண முகத்தில் ஒரு புன்சிரிப்பை வரவழைத்துக் கொண்டு, பணத்தை வாங்கிக் கொண்டு அன்றே சென்னைக்குப் புறப்பட்டான். நினைத்த மாத்திரத்தில் இந்தப் புன்சிரிப்பை வரவழைக்கும் திறன் ஒரு தெய்வீக சக்தி. அது போட்டோ எடுத்துக் கொள்ளும் பொழுது மட்டுமல்ல, வாழ்க்கையில் மிக நெருக்கடியான சமயங்களிலும் உபயோகப் படுமென்பதை எல்லாரும் ஒத்துக்கொள்வார்கள். திருவள்ளுவர் இதைத்தான் "இடுக்கண் வருங்கால் நகுக" என்று சொல்லியிருக்கிறார்.

2

சாரங்கபாணி சென்னைமா நகருக்கு வந்து இரண்டு வாரங்களாயின. நண்பர்களில் வேலையிலிருந்தவர்கள் தாங்கள் வேலை சம்பாதிப்பதற்குப் பட்ட கஷ்டங்களைச் சொல்லி மற்றவரிடம் போகச் சொன்னார்கள். அவனைப்போலவே வேலைக்குத் திண்டாடியவர்களின் கதை ஓரளவு மன ஆறுதல் அளித்ததே தவிர வேறு பயன் தரவில்லை. ஹோட்டலில் சாப்பிட்டு, ரிக்ஷாவிலும் டிராமிலும் பஸ்ஸிலும் திரிந்து, ஆபீஸ் வாசல் காப்போர்களுக்குக் காணிக்கை கொடுத்து, கையிலிருந்த பணமெல்லாம் அனேகமாய்க் கரைந்து விட்டது.

ஒருநாள் மாலை சாரங்கபாணி மவுண்ட் ரோடில் ஒரு பெயர் பெற்ற காப்பி கிளப்பில் காப்பி சாப்பிட நுழைந்தான். இட்லி சாப்பிட்டுக் கொண்டிருக்கையில் முதுகில் பலமாக யாரோ தட்டவும் திரும்பிப் பார்த்தான். இப்படித் தட்டுவதால் நண்பனின் மனக் கவலையை அப்புறப்படுத்தலாம் என்பது ஒரு கோட்பாடு. ஆனால் தட்டப்படுகிறவனுக்குக் கொஞ்சம் சரீர திடம் வேண்டியிருக்கும். தன்னுடன் கூடப் படித்த மணியின் முகத்தைக் கண்டான். மணி, மாணவர்களிடையே 'ஒரிஜினாலிடி' அல்லது விபரீதமாய் ஓடும் மூளைக்குப் பேர்போனவன்.

சாரங்கபாணி திரும்பினதும் மணி, "இச் சென்னையில் என்ன செய்கிறாய்?" என்று கேட்டான். சாரங்கபாணி, "ஏதாவது வேலை அகப்படுமா என்று பார்க்கவந்தேன்" என்றான்.

மணி, 'பெரிய வக்கீல் பிள்ளையாயிருந்து வேலைக்குத் தேடி யலைகிறாயே? நீயும் பி. எல். பாஸ் செய்து அப்பாவுடன் வக்கீல் தொழில் நடத்தக் கூடாதா? இல்லாமற் போனால் கல்யாணம் ஆகியிருந்தால் மாமனார் வீட்டில் சில காலம் கழிக்கலாமே!" என்றான்.

சாரங்கபாணி, "வக்கீல் தொழில் பிடிக்கவில்லை. கூழுக்காக ஊழைப் பெருக்க மனமில்லை. கல்யாணமும் ஆகவில்லை. தகப்பனருக்குத் திடீரென்று டையபீடிஸ் வியாதி உண்டாகித் தொந்தரவு செய்கிறது!" என்றான்.

மணி, "தைரியத்தைக் கைவிடாதே" என்றான். இதற்குள் பையன் காப்பி கப்பை மேஜைமேல் வைத்துக் காதிலிருந்த பென்சிலை யெடுத்து பில் எழுத ஆரம்பித்தான். மணி "கொஞ்சம் இரு தம்பா! எனக்கும் இரண்டு இட்லியும் காப்பியும் கொண்டு வா, இரண்டு பேருக்கும் சேர்த்து எழுது" என்றான். சாரங்கபாணி ஒரு வேளை டிபன் செலவு மீந்ததே என்று நினைத்துச் சிறிது சந்தோஷப்பட்டான்.

# பட்டணத்து வாழ்க்கை!



"என்ன ஸார், உங்களை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கிறதே! நீங்கள் எங்கே வேலையில் இருக்கிறீர்கள்?"

"கலெக்டர் ஆபீஸிலே இருக்கிறேன்."

"அடடே, நானும் அங்கேதானே வேலை செய்கிறேன். உங்களை நான் தெரிந்து கொள்ள வில்லையே! நீங்கள் எங்கே குடி இருக்கிறீர்கள்?"

"ரங்காசாரித் தெருவிலே, 13-ம் நெம்பர் வீட்டிலே!"

"அடாடா! நான் 14-ம் நம்பரிலே இருக்கிறேன், ஸார்!"

---

காப்பி சாப்பிட்டுக் கொண்டே சாரங்கபாணி "மணி, நீ என்ன செய்கிறாய்?" என்று கேட்டான்.

மணி, "பரோபகாரன்" என்று சொல்லி, மௌனமாயும் வேகமாயும் இட்லியைச் சாப்பிட்டு முடித்து, "நீ இந்த பில்லை எடுத்துக் கொண்டு போய்க் கேஷியரிடம் கொடுத்து விடு. பர்ஸை எங்கேயோ தொலைத்து விட்டேன்" என்றான்.

சாரங்கபாணி அற்ப காலம் சந்தோஷப் பட்டதற்குத் தன்னை நொந்து கொண்டு பில்லை எடுத்துக் கொண்டு கேஷியர் மேஜைக்குச் சென்றான். இதற்குள் மணி காப்பியைச் சாப்பிட்டு விட்டுத் தன் கைப் பெட்டியிலிருந்து காகிதம் எடுத்து அவசரமாய் ஒரு கடிதம் எழுதி விலாசமெழுதிக் கேஷியர் மேஜைக்கு வந்தான். சாரங்கபாணி பணத்தைக் கொடுத்து விட்டுச் சில்லறையை வாங்கிக்கொண்டு மணியிடம் "நான் போய் வருகிறேன்" என்றான்.

"எங்கே யிருக்கிறாய்? நீ போகும் பொழுது இந்தக் கடிதத்தைத் தபாலில் போட்டு விடு. நீ பி. ஏ. க்கு என்ன பாஷை எடுத்துக் கொண்டாய்?" என்று கேட்டான்.

"ஒய். எம். ஸி. ஏ. யில் இருக்கிறேன். பி. ஏ. யில் என் பாஷை தமிழ் தான். அதில் பரிசு கூட வாங்கி யிருக்கிறேன்" என்றான்.

சாரங்கபாணி இந்தப் பரோபகாரன் எங்கே தமிழில் ஏதாவது வியாசம் எழுதச் சொல்லி விடுவானோ என்று பயந்து கடிதத்தை வாங்கிக்கொண்டு வெளியேறினான். கடிதத்தைத் தபால் கம்பத்தில் போடுகையில், "பத்திராதிபர், பரோபகாரன்" என்ற விலாசம் அவன் கண்களில் பட்டது. திடீரென்று அவனுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. ஏன் அந்தப் பத்திரிகை ஆபீஸிலேயே ஒரு வேலை அகப்படுமா என்று பார்க்கக் கூடாது? அன்று நேரமாய் விட்டதால், அடுத்த நாள் காலை பதினொரு மணிக்கு மயிலாப்பூரிலுள்ள 'பரோபகாரன்' ஆபீசுக்குச் சென்றான். பத்திரிகை ஆபீசுக்கு வெளியே நின்று கொண்டிருந்த காரிக்குக் கப்பம் கட்டினதும், அவன் உடனே இணங்கினான். தன் பெயர் அடித்த விலாசச் சீட்டை அவன் கையில் கொடுத்து, பத்திராதிபருக்குக் கொடுக்கச் சொன்னான்.

பத்திராதிபர், சாரங்கபாணியை மரியாதையாய் வரவேற்று, "இப் பத்திரிகையில் அனுபவம் வாய்ந்தவர்களைத்தான் சேர்த்துக் கொள்வது வழக்கம். தங்களுக்கு முன்னே பத்திரிகையில் வேலை செய்து பழக்க முண்டோ?" என்று கேட்டார். சாரங்கபாணி "இல்லை" என்றான். "இப்பொழுது நமக்குப் புத்தகங்களை விமர்சனம் செய்ய ஆள் தேவை, நீங்கள் அந்த வேலையை ஏற்றுக் கொள்ள வேண்டும். வேலை நாசுக் கானது, பொறுப்புள்ளது. ஜாக்கிரதையாய்ச் செய்ய வேண்டும். நமக்கு இப்பொழுது சற்றுப் பண நெருக்கடி. அறுபது ரூபாய் சம்பளம் தருகிறோம். பின்னால் உயர்த்தப் படலாம்" என்றார்.

சாரங்கபாணி இவ்வளவு சுலபமாய் வேலை கிடைத்ததே என்று சந்தோஷப் பட்டு 'சரி' என்று ஒத்துக் கொண்டு விடை பெற்று ஒய். எம். ஸி. ஏ. யில் தன் அறைக்கு வந்து சேர்ந்தான். உடனே வேலை கிடைத்ததாகத் தகப்பனாருக்குக் கடிதம் எழுதினான். தகப்பனாரிடமிருந்து, அவன் அதிர்ஷ்டத்தைக் கண்டு தாம் மிகவும் சந்தோஷப் படுவதாகப் பதில் வந்தது. சாரங்கபாணி தனக்கு வேலை கிடைத்தது தன் முயற்சியால் என்பதைத் தகப்பனார் ஒத்துக் கொள்ள வில்லையே என்று கொஞ்சம் மனக் குறைப்பட்டான்.

ஒரு மாதம் தகப்பனரிடமிருந்து கடிதமே வரவில்லை. பிறகு தாயாரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் தகப்பனருக்கு உடல் நிலை ரொம்பக் கெட்டுப்போய் விட்டதாகவும், அவனை வந்து பார்த்துவிட்டுப் போனால் நல்லதென்றும் எழுதியிருந்தது.

சாரங்கபாணி சென்னை பூராவும் அலைந்தான். திருவல்லிக்கேணியில் ஒரு வீட்டில் ஒரு பகுதி கிடைத்தது. தகப்பனருக்கு உடனே எல்லாரையும் அழைத்துக்கொண்டு வரும்படி கடிதமெழுதினன். அப்படிச் செய்தால் தகப்பனருக்குச் சிகிச்சை, தங்கைக்கு வரன் தேடுவது, தன் உத்தியோகம் எல்லாவற்றிற்கும் சௌகரியமாயிருக்குமென்று எடுத்துக் காட்டினன்.

3

சாரங்கபாணி வேலையை ஊக்கத்துடன் செய்தான். பெரிய எழுத்தாளர்களின் குறைகளைத் தைரியமாய்ச் சுட்டிக் காட்டினன். புதிய எழுத்தாளர்களிடையே கண்ட விசேஷங்களைப் புலப்படுத்தினன். இதனல் பத்திரிகையின் விற்பனையும் செல்வாக்கும் அதிகரித்தது. ஒரு நாள் பத்திராதிபர் அவனைக் கூப்பிட்டு, "நாம் சிறு கதைகளில் சற்று அதிக கவனம் செலுத்த வேண்டும். 'முன்னேற்றம்' என்ற நமது சகோதரப் பத்திரிகை கைதேர்ந்த சிறுகதை எழுதுபவர்களைப் பிடித்திருக்கிறது. நீங்களும் ஏதாவது கதைகள் எழுத முயல வேண்டும்" என்றார்.

வாரம் வாரம் சிறு கதைகள் எழுதுவது சுலபமல்ல. நடையிருந்தால் நிகழ்ச்சிகள் தோன்றுவதில்லை. நிகழ்ச்சி தோன்றினல் நடைத்திறன் கை விட்டுப் போய் விடும். இரண்டுமிருந்தாலும் உணர்ச்சி இருப்பதில்லை. இவன் எழுதின வியாசங்களையும் கதைகளையும் கண்டித்து யாரோ 'முன்னேற்றம்' பத்திரிகையில் சுந்தரம் என்ற பெயருள்ளவர், ஆணோ பெண்ணோ தெரியவில்லை, ஸ்திரீ தூஷணை கூடாதென்று எழுதி வந்தார். பாரதியாரை உபமானமாக எடுத்துக் காட்டி, "இருபத்தோராவது சகாப்தத்தில் பெண்களைப்பற்றிக் கதைகளிலும் வியாசங்களிலும் இழிவாக எழுதுவதைப் பார்க்க ஆச்சரியமாயிருக்கிறது" என்று 'சுந்தரம்' என்ற பெயருடன் எழுத்தாளரின் கண்டனக் கடிதம் தோன்றிற்று. இரு பத்திரிகைகளிலும் சீதை, கிருஷ்ணன், திரௌபதி, கைகேயி முதலிய புராணப் பெயர்கள் அடிபட்டுப் பெரிய வாக்குப் போர் நடந்தது. பத்திராதிபர் சண்டையை ஒரு மாதம் நிறுத்தினல் நல்லதென்று சொன்னர்.

இந்த வேலைக் கவலையோடு தகப்பனரின் உடல் நிலை வரவர மோசமாய்க் கொண்டு வந்ததால் அது அவனைப் பெரிதும் வாட்டிற்று. ஒரு நாள் மாலை கடற்கரையில் மணலின்மேல் உட்கார்ந்துகொண்டு சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். நேற்று நன்றாயிருந்தவர் திடீரென்று வியாதியால் பீடிக்கப்படுவதும், அவருக்குப் பெரிய டாக்டர்கள் வரவழைத்துப் பார்க்கச் சொல்லத் தன்னிடத்தில் போதுமான பணமில்லாததைப் பற்றியும் நினைத்து வருந்தினன். ஓயாமல் கொந்தளிக்கும் அலைகளையும், தண்ணீரில் விளையாடும் குழந்தைகளையும் பார்த்து, "இதையெல்லாம் கடவுள் பார்த்து நடத்துகிறாரா? இந்தப் பெரிய மாயா உலகத்தை நடத்துபவருக்கு ஒரு தனி மனிதனின் சுகதுக்கத்தைக் கவனிக்கத் தோன்றுமா?" என்று வியந்தான்.

இதற்குள் யாரோ பெண்கள் கத்தும் சப்தம் கேட்டது. "ஷார்க்! ஷார்க்!" என்று சிலர் கத்தினர்கள். சாரங்கபாணிக்கு நன்றாய் நீந்தத் தெரியும். கெட்டதை வெறுத்து நல்லதை விரும்பும் உணர்வைக் கடவுள் ஒவ்வொரு மனிதனுக்கும் தந்திருக்கிறார். அதைச் செய்யப் போதுமான மனோவலி சிலருக்குத்தான் அளிக்கிறார். உடனே சொக்காயை அவிழ்த்தெறிந்து பேனக் கத்தியைத் திறந்து வைத்துக்கொண்டு கூக்குரல் கிளம்பின நீரின் பாகத்தை நோக்கி நீந்தினன். ஏதோ பயங்கரமான மீனைக்



தோட்டக்காரன் (நீர்ப்பாய்ச்சும் குழாயில் ஓட்டை ஏற்பட்டிருப்பது தெரியாமல்)— இந்தப் பாழும் மழை நான் எப்போது ஜலம் பாய்ச்ச ஆரம்பிக்கிறேனே, அப்போதுதான் வருகிறது!

கண்டான். சமாசாரப் பத்திரிகைச் சுறாவல்ல. நிஜமான சுறாமீன். அதைப் பேனாக்கத்தி முனையால் பலமாகக் குத்தினான். சமுத்திர நீரில் சிவப்புத் தோன்றிற்று. பின்பு அது ஓடிவிட்டது. காலில் சுமார் ஆறு வயதுள்ள ஓர் சிறு பெண்ணின் உடம்பு பட்டது. அதைக் கையில் பற்றிக்கொண்டு மணலையடைந்தான்.

ஒரு ஸ்திரீயும் பெண் வேலைக்காரியும் ஓடி வந்து குழந்தையை வாங்கிக்கொண்டு, அவசரமாய் நன்றிகூறிவிட்டு, பாதையோரம் நின்றிருந்த காரில் போட்டுக் கொண்டு சென்றார்கள். சாரங்கபாணிக்குக் காரில் சென்றவள் அவனுள்ளத்தையும் பற்றிக் கொண்டு சென்றாற் போலிருந்தது. அவர்கள் சென்ற பின் சாரங்கபாணி திட்டு ஓரத்தில் ஒரு மணிபர்ஸ் விழுந்திருக்கக் கண்டான். அதை எடுத்துக் கொண்டு தன் ஜாகை வந்து சேர்ந்தான். பர்ஸைத் திறந்து பார்த்தான். அதன் அறை ஒன்றில் சில்லறை யிருந்தது. மற்றொரு அறையில் ஒரு போட்டோ இருந்தது. அது தன்னுடையதாகவே யிருக்கக் கண்டு வியந்தான். "என்னுடைய போட்டோ இந்தப் பர்ஸின் சொந்தக்காரிக்கு எப்படிக் கிடைத்தது!" என்று யோசிக்கலானான். தகப்பனாருக்கு அதைக் காட்டினான். தகப்பனார், "அது நரசிம்மாச்சாரியாருக்கு அனுப்பியது. உனக்கு எப்படிக் கிடைத்தது?" என்று கேட்டார். "ஒருவேளை அந்தப் பெண் நரசிம்மாச்சாரியுடைய பெண்ணாயிருக்கலாமோ" என்று சாரங்கபாணி சந்தேகித்தான். தான் முன்னால் அவசரப்பட்டுக் கல்யாணம் வேண்டாமென்று சொன்னதற்கு வருந்தினான். அவளுக்கு இப்பொழுது கல்யாணம் ஆகியிருக்குமோ என்று ஏங்கினான்.

4

ஒரு ஞாயிற்றுக்கிழமை சாயந்திரம். சாரங்கபாணி அதே மவுண்ட்ரோட் காப்பி கிளப்பில் மறுபடியும் மணியைச் சந்தித்தான். பழையபடி தன்னைப் பகைக்கச் சொல்லுவான் என்று நினைத்தான். சும்மா யிருந்தால் போய் விடுவானென்று நினைத்தான். மணி அவனை விடவில்லை. "ஏன் மூஞ்சியைத் தூக்கப் போட்டுக்கொண்டிருக்கிறாய்? காதல் நோயா, என்ன? நீ காலேஜில் 'ஸெண்டி மெண்டல்' என்று பெயர் வாங்கினவனாயிற்றே?" என்றான். சாரங்கபாணி தன் தகப்பனாரின் தேக நிலையைப் பற்றிக் கவலையாயிருப்பதாகச் சொன்னான். மணி தனக்கு ஒரு பிரபல டாக்டரைத் தெரியுமென்றும் அவரிடம் சொல்லி அவன் தகப்பனாரைப் பார்க்கச் சொல்லட்டுமா என்றும் கேட்டான். சாரங்கபாணி ஒப்புக்கொள்ள, டாக்டர் மாதவன் எம். ஆர்., ஸி. பி., வந்து, கிருஷ்ணமாசாரியைப் பார்த்தார். அவர் கைராசியோ என்னவோ வியாதியின் உக்கிரம் குறைந்து, கிருஷ்ணமாசாரியார் உடம்பு குணமடைய ஆரம்பித்தது. சாரங்கபாணி மணியைத் தன் வீட்டிற்கு ஒழிந்த நாளில் வரும்படி தன் தகப்பனார் கேட்டுக் கொண்டதாகச் சொன்னான். மணி அடுத்த ஞாயிற்றுக்கிழமை சாயந்திரம் வருவதாகச் சொன்னான்.

அவன் வந்த நாள் தீபாவளியாக அமைந்தது. "முன்னேற்றம்" தீபாவளி மலரில் எழுத்தாளர்களின் படங்களில் தான் கடற்கரையில் பார்த்த பெண்ணின் படத்தைப் பார்த்து, அதன் அடியில் சுந்தரம் என்று இருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டான்.

அன்று சாயந்திரம் சுப்பிரமணியன் சொன்ன பிரகாரம் வந்து சேர்ந்தான். கிருஷ்ணமாச்சாரியார் அவனை அன்புடன் வரவேற்றார். அவன் அனுப்பின டாக்டரின் சிகிச்சையால்தான் உடம்பு தேறி விட்டதாகச் சொல்லி அவன் ஊர் பெயர், குலமெல்லாம் விசாரித்தார். சுப்பிரமணியன் தான் ஸ்ரீரங்கம் நரசிம்மாச்சாரியார் பிள்ளை என்று சொன்னான். கிருஷ்ணமாச்சாரியார் சாரங்கபாணியைப் பார்த்து "இவருடைய தகப்பனாரும் நானும் சேர்ந்து படித்தவர்கள். இவனுடைய தங்கையைத் தான் உனக்கு மணம் செய்து வைக்க முயன்றேன். கல்யாணம் நின்று போய் விட்டது. நரசிம்மாச்சாரியாரும் இப்பொழுது காலகதி யடைந்து விட்டார் என்று கேட்டு மிகவும் வருத்தப்படுகிறேன்" என்று சாரங்கபாணியிடம் சொல்லி, மணியைப் பார்த்து "உன் தகப்பனார் உனக்கு அதிகமாய் மீந்து வைத்திருக்க மாட்டாரே? என்ன வேலையிலிருக்கிறாய்?" என்று கேட்டார். மணி, "அவர் கடன் தான் மீந்து வைத்தார். நல்லவேளை! எனது மாமன் ஒருவர் கல்கத்தாவிற்குச் சென்று தரகு வியாபாரத்தில் நிறையப் பணம் சம்பாதித்து ஸன் ஸ்ட்ரோக்கினால் மரண மடைந்து விட்டார். பழைய வாஞ்சையை நினைத்துத் தமக்குச் சந்ததி யில்லாததால் எனக்குச் சொத்தை எழுதி வைத்திருந்தார். இப்பொழுது,

"எனக்குச் சாப்பாட்டிற்குக் கவலை யில்லை" என்றான்.

கிருஷ்ணமாச்சாரியார், "பணமிருந்தாலும் உத்தியோகம் பருவது லக்ஷணமல்லவா? ஏதாவது ஒரு வேலை செய்வது நல்லதல்லவா?" என்றார். மணி, "'பரோபகாரன்' என்ற பத்திரிகை என்னுடைய பத்திரிகைதான். உங்கள் பிள்ளைக்கு வேலை கொடுத்ததும் நான்தான். ஆனால், நான் செய்த உபகாரத்திற்குப் பன்மடங்கு மேலான உபகாரம் அவனிடமிருந்து பெற்றுக் கொண்டேன்" என்று சாரங்கபாணியைப் பார்த்தான். சாரங்கபாணி ஆச்சரியத்தாலும் வெட்கத்தாலும் தலைகுனிந்தான். மணி மேலும், "அன்று நீ கடற்கரையில் காப்பாற்றின குழந்தை என் தங்கை" என்றான். சாரங்கபாணி, "கூட இருந்த யுவதி யார்?" என்று கேட்க எண்ணினான். மணி மேலும், "என் தங்கை சுந்தரம் உங்கள் பிள்ளை தைரியமாய் நீந்தி வத்சலாவைக் காப்பாற்றின விவரத்தை எனக்குத் தெரிவித்தாள்!" என்றான். சாரங்கபாணியைப் பார்த்துச் சிரித்து விட்டு, "உங்கள் பிள்ளைக்குக்கூடச் சுந்தரத்தைத் தெரியும். இவனுக்கும் என் தங்கைக்கு மிடையே பெரிய சண்டை நடந்தது. நான்தான் அதை நிறுத்தினேன்!" என்றான்.

சாரங்கபாணி மணியைப் பார்த்து, "நீ சமயத்தில் செய்த நன்றிக்கு நான் என்ன பிரதி உபகாரம் செய்ய முடியும்?" என்று தீனமான குரலில் கேட்டான். மணி, "நீ என் வீட்டிற்கு நாளை வா. நீ என்ன பிரதியுபகாரம் செய்யக் கூடுமென்று காட்டுகிறேன்!" என்று சொல்லிக் கிருஷ்ணமாச்சாரியாரிடம் விடைபெற்றுச் சென்றான்.

5

மயிலாப்பூரில் மணியின் பங்களாவிற்கு அடுத்த நாள் சாயங்காலம் சஞ்சல இதயத்துடன் சாரங்கபாணி சென்றான். வாசலில் தான் கடற்கரையில் கண்ட யுவதியைக்

---

## தியாகராஜநகர் திருப்பணி

இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன், ஔவையார் ஒரு வரி எழுதினாலும் எழுதினாள், தியாகராயநகர் வாசிகளுக்கு ஏழெட்டு வருஷகாலமாக ஒரு கவலையை ஏற்படுத்தி வைத்து விட்டாள். 'கோவிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்பதைப் புது மாம்பலத்தில் வீடு வாசல் வாங்கிக்கொண்டவர்கள் நினைந்து நினைந்துக் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார்கள். இதற்கு என்ன செய்வதென்று தெரியாமல் எல்லோரும் பகவானைப் பிரார்த்தித்தபோது, சில ஆஸ்திக சிகாமணிகள் மனதில் பகவான் புகுந்து, இந்தக் குறையை நிவர்த்திக்க ஒரு வழி தோன்றச் செய்தார்.



அவர்கள் ஒன்று சேர்ந்து, 'மாம்பலம் சன்மார்க்க சம்வர்த்தினி சபை' என்று ஒரு சபையை ஏற்படுத்தினார்கள். பகவானும் பல தனவான்களின் மனதில் புகுந்து அதற்கு நன்கொடைகள் அளிக்கும்படி செய்தார். அந்தத் தொகையைக் கொண்டு இச்சபையார் ஏழெட்டு வருஷகாலமாகக் கட்டிவந்த ஆலயம் சமீபத்தில் பூர்த்தியாயிற்று. ஜூன் மாதம் 21வ. வியாழக்கிழமை வெகு விமரிசையாகக் கும்பாபிஷேகமும் நடந்தேறியது.

மேற்படி கோயில்களில் சிவன், விஷ்ணு, விநாயகர், சுப்ரமணியர் எல்லோரும் சகுடும்பத்துடன் எழுந்தருளி மாம்பலத்தில் கோயிலில்லாத குறையை நீக்கினார்கள். கும்பாபிஷேகத்தின் போது, வேத பாராயணங்கள், ஆஸ்திக உபன்யாசங்கள், மேளக் கச்சேரிகள், நாட்டியக் கச்சேரிகள் எல்லாம் நடந்தன. இக் கோயில் திருப்பணியில் மிகவும் சிரத்தை யெடுத்துக் கொண்டு உழைத்த ஸ்ரீமான்கள் எஸ். ராமஸ்வாமி நாயுடு, ராவன் கிருஷ்ண ஐயர், ஜி. நாராயணஸ்வாமி ஐயர், ஆகியவர்களுக்கும், திருப்பணிக்கு மூலகாரண புருஷரான ஸ்ரீ லோகநாத ஐயர் அவர்களுக்கும் தியாகராய நகர் ஆஸ்திக மகா ஜனங்கள் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறார்கள் என்று சொல்லவும் வேண்டுமா? கும்பாபிஷேகம் நடந்த ஆலயத்தில் சிவனும் விஷ்ணுவும் அடுத்தடுத்துக் கோயில் கொண்டிருப்பதை இந்தப் படத்தில் காணலாம்.

கண்டான். அவன் இவனைப் பார்த்துப் புன்முறுவல் செய்து தன்னிடம் யாரோ வந்திருப்பதாகச் சொன்னான். மணி இவனை உள்ளே அழைத்துச் சென்று வத்சலாவைக் கூப்பிட்டு, ''இந்த மாமாதான் உன்னைக் காப்பாற்றினவர். சுந்தரத்தை ஒரு தட்டில் மாம்பழமும் ஒரு கப்பில் பாலும் கொண்டு வரச் சொல்'' என்றான். சுந்தரம் பாலும் பழமும் வைத்து நின்றாள். மணியுடன் பேசிக் கொண்டே சாரங்கபாணி சுந்தரத்தைக் கடைக்கண்ணால் பார்த்துக் கொண்டிருந்தான். இதைக் கண்ட மணி, ''உன் தகப்பனார் உனக்காக என் தங்கையைக் கேட்டது உனக்குத் தெரியாதா? உன்னுடைய போட்டோவைப் பார்த்தது முதல் அவள் உன் மேல் பிரமை கொண்டு விட்டாள். வந்த வரன்களையெல்லாம் நிராகரித்து விட்டாள். அந்தப் பிரமை பத்திரிகைப்போரால் அதிகமாகி நீ செய்த வீரச்செயலினால் பக்தியாக மாறி விட்டது. உன்னை இப்பொழுது அவள் தெய்வமாகக் கருதுகிறாள். அவளைக் கல்யாணம் பண்ணிக்கொள்ள உனக்குப் பிரியமா?'' என்று கேட்டான். சாரங்கபாணிக்குப் பழம் நழுவிப் பாலில் விழுந்தாற் போலிருந்தது. ''ஆம்'' என்று தலையசைத்தான். மணி, ''இதற்கு எனக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறாய்?'' என்று கேட்டான்.

''என்னால் என்ன செய்ய முடியும்?'' என்று கேட்டான் சாரங்கபாணி. ''இல்லறமல்லது நல்லறமல்ல. நான் கல்யாணம் செய்து கொள்ளாமலிருக்கலாமென்று தான் நினைத்தேன். ஆனால் எனது பெயர் பெற்ற பிரம்மச்சாரி நண்பர் ஐம்பது வயதுக்குப் பின் மணம் செய்து கொள்ள ஆரம்பித்ததைப் பார்த்துத் தைரியத்தை இழக்க ஆரம்பித்தேன். இதற்கு நீதான் உதவி செய்ய வேண்டும்'' என்றான் மணி. சாரங்கபாணி, ''இதற்கு நான் என்ன செய்யமுடியும்?'' என்று கேட்டான். ''உனக்கு ஒரு தங்கையிருக்கிறாளல்லவா? அவளை நான் கல்யாணம் செய்துகொள்ள விரும்புகிறேன்'' என்றான். சாரங்கபாணி, ''பத்மாவையா சொல்லுகிறாய்? அவளை ஒருவர் கல்யாணம் செய்து கொள்ள முன் வருவார் என்று நான் நினைக்கவேயில்லை. அவளை நீ நன்றாய்ப் பார்த்தாயா? எதைக் கொண்டு இச்சை கொண்டாய்?'' என்று கேட்டான்.

''உன் தங்கை அருமை உனக்குத் தெரியாததைப் பற்றி வருந்துகிறேன். அவள் சற்றுக் கறுப்பாயிருக்கிறாளென்று அலட்சியமோ? நீ புராணங்களில் திரௌபதி, சத்யவதி, கிருஷ்ணன் இவர்களெல்லாம் பார்த்தவர்களை மயக்கினதாகப் படிக்கவில்லையா? மேலும் காதல் விஷயத்திலும் வர்ண த்வேஷத்தை நீ ஆதரிப்பதைக் கண்டு ஆச்சரியப்படுகிறேன்.''

சுப முகூர்த்தங்களில் சாரங்கபாணிக்கும் சுந்தரத்திற்கும், பத்மாவிற்கும் மணிக்கும் கல்யாணம் மங்களமாய் நடந்தது. அவர்கள் போட்டோவும் பத்திரிகையில் வந்தது. பார்த்தவர்கள் எல்லாரும் ஜோடிகள் நன்றாயமைந்தன வென்று சொன்னார்கள். ஆனால் படத்தில் புடவைகளின் கலரும் பார்டரும் சரியாய்த் தெரியவில்லையே என்ற வருத்தம் மட்டும் சிலருக்கு ஏற்பட்டது.

★ ★ ★

ஜெர்மனியிலிருந்து தப்பி ஓடி வந்த ஒரு யுத்தக் கைதி ஒரு பிரஞ்சு சர்க்கஸ் கம்பெனிக்காரரிடம் தம்மைக் காப்பாற்றும்படி வேண்டிக் கொண்டார்.

''நான் உம்மை வேலைக்கு வைத்துக்கொண்டால் ஜெர்மன் ரகசியப் போலீசார் உம்மை எப்படியும் கண்டு பிடித்து விடுவார்கள். ஆகையால், நீர் ஒரு கொரில்லா (மனிதக் குரங்கு) தோலைப் போர்த்திக் கொண்டு நடித்துக் கொண்டிருந்தால் வேலைக்கு வைத்துக் கொள்கிறேன்'' என்றார் சர்க்கஸ்காரர்.

அப்படியே அந்தக் கைதியும் நிஜக் குரங்கைப்போலவே நடித்து வந்தார்.

ஒரு நாள் இரவு சர்க்கஸிலிருந்த சிங்கம் ஒன்று, அவரை நோக்கி வந்துகொண்டிருந்தது. அந்த யுத்தக் கைதி தாம் குரங்கு வேஷம் தரித்துக்கொண்டிருப்பதையும் மறந்து, ''ஐயோ! சிங்கம்! சிங்கம்!'' என்று கத்தி விட்டார். ஆனால் அந்தச் சிங்கம் அவர் அருகில் வந்து, ''அட பைத்தியமே. ஏன் கத்துகிறாய்? இங்கே வந்து ஒளிந்து கொண்டிருக்கும் யுத்தக் கைதி நீ ஒருவன் மட்டும்தான் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா?'' என்றதாம்.



உணவு...

எரி துரும்பு...

துணிகள்...

குழந்தைகளின்
படிப்பு...




# வியாகூலத்தால்
# சூழ்ந்துகொள்தல்

யுத்தம், யுத்தத்தில் ஈடுபட்டிருப்பவர்கள், வியாபாரத்திலிருப்பவர்கள் அல்லது பூமியில் உள்ள ஒவ்வொருவருக்கும் பிரதிபலிக்கும் கஷ்டத்தைத் தருகிறது. ஆகாரவகைகள் கிடைப்பது கஷ்டமாயும் அதிக செலவுள்ளதாயுமிருக்கு ஜன நெருக்கம் அதிகமுள்ள டிராம், பஸ், ரெயில்களில் பிரயாணம் செய்வது மிகவும் அசௌகரியமாய் இருக்கிறது. சிலசமயம் அபாயமானதாகக்கூடயிருக்கும் துணிவகைகள் யுத்தத்திற்குமுன் இருந்ததைவிட மிக அதிக விலையாயும் கிடைப்பது கஷ்டமாயும் இருக்கிறது. ஒவ்வொருவரும் முன்னேக்காட்டிலும் அதிக நெருக்கத்திலும் கஷ்டப்பட்டும் வேலை செய்யவேண்டி இருக்கிறது. அதனுல் நாள் கள் முழுவதும் வேலை செய்து களைத்துப்போன அநேகம் பேர்கள் ஆறுதலும் சுகமும் அடைய ஒரு கப் கோப்பை தேநீர் அருந்துகின்றனர். டீ சேர்த்துகிறது—உங்களைசந்தோஷப் படுத்துகின்றது. உங்களை அதிக அலுப்பில்லாமல் செய்கிறது. டீ தான் எந்த இடத்திலும் எந்நேரத்திலும் அதி உன்னத பானம்.








களைப்படையும் சமயம் டீ அருந்துங்கள்

இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது.

IK 355T4




மிக நேர்த்தியான மணமும், நல்ல நிறமும், குறைந்த விலையும் உள்ள லிப்டன்ஸ் தேயிலை பெண் தேயிலைகள் இதர தேயிலைகளை விட சிறந்தவை.




# லிப்டன்ஸ் தேயிலை பெண்

நேர்த்தியான இந்திய தேயிலை

# கண்ணம்மாளின் கவலை

வி. எஸ். ஆர்.



“இந்தாயேன்! உன்னைத் தானே! இன்னுமா சமைச்சுக்கிட்டு உட்கார்ந்திருக்கே! எனக்குப் புறப்பட நாழியாகவில்லை?” என்று சொல்லிக்கொண்டே சுப்பையா முண்டாசை எடுத்து வரிந்து கட்டிக் கொண்டு படகோட்டும் துடுப்பைக் கையில் எடுத்தான்.

“இதோ கால் நாழியிலே எல்லாம் ஆயிடும். இன்னிக்கி ஆடி அமாவாசையில்லே? பாயசம் வைச்சு அப்பளம் பொரிச்சு ...” என்று கண்ணம்மா சொல்லும்போது அவள் குரல் கம்மியது. இருந்தாலும் தன் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு, சிரிப்பை வரவழைத்துக் கொண்டு “அதை ஏன் கேட்கிறீங்க! இன்னிக்கு விருந்து நடபுடல் போங்க!” என்றாள். “நீ என்னைக்குத்தான் விருந்து பண்ணாமல் இருக்கிறாய்? தினமும் தான் விருந்து! உன் கையினாலே எது செய்தாலும் தேனாகத்தான் இனிக்கிறது” என்றான் சுப்பையா.

சுப்பையாவுக்குப் படகோட்டும் தொழில். கோடிக்கரையிலிருந்து சாமான்களை ஏற்றிக் கொண்டு யாழ்ப்பாணத்திற்குக் கொண்டு போவான். நல்ல வரும்படி கிடைத்து வந்தது. சமுத்திர அலைகளின் மேலும் கீழுமாகப் படகு ஊர்ந்து செல்லும்போது ஆகாயத்தில் பறப்பதுபோல் முன்பெல்லாம் அவன் ஆனந்தமடைவது வழக்கம்.

ஆனால் இரண்டு வருஷங்களுக்கு முன் கண்ணம்மாளைக் கல்யாணம் செய்து கொண்டதும், அவனுக்குப் படகோட்டும் தொழிலே கசந்து விட்டது. காரணம், மனைவியைப் பிரிந்திருக்க . வேண்டுமே என்ற எண்ணந்தான். ஒரு தடவை சாமான்களை எடுத்துக்கொண்டு புறப்பட்டு விட்டால் வீட்டுக்குத் திரும்பி வருவதற்கு அவனுக்குப் பதினைந்து நாட்களாவது ஆகும். வந்தாலும், நாலு நாட்கள்கூட வீட்டில் தங்கியிருக்க முடியாது. மறுபடியும் வியாபாரிகள் சுப்பையாவின் பிராணனை வாங்கிச் சாக்கை எடுத்துக் கொண்டு புறப்படும்படி செய்து விடுவார்கள்.

கணவனைப் பிரிந்திருக்கும் ஒவ்வொரு நிமிஷமும் கண்ணம்மாளுக்கு ஒரு யுகமாக இருந்தது. கடற்கரையிலுள்ள குடிசையிலிருந்து சமுத்திரத்தையே பார்த்துப் பார்த்து பெருமூச்சு எறிவாள். சில சமயம் கணவனை எதிர்பார்த்துப் பார்த்து அவள் கண்கள் பூத்து விடும். குறிப்பிட்ட நாட்களில் கணவன் வராவிட்டாலோ கடல் அலையைப் போல் அவள் மனம் கொந்தளிக்கும். அவனுக்கு என்ன ஆபத்து நேரிட்டிருக்குமோ என்று எண்ணி எண்ணி அவள் மனம் உருகும். திடீரென்று சுப்பையா ஒருநாள் வந்து விடுவான்.

அப்பொழுது குதூகலத்துக்குக் கேட்கவா வேண்டும்? தினமும் வீட்டில் விருந்துதான். சுப்பையா தன் மனைவிக்கு விதம் விதமான ரவிக்கைத் துணிகள், புடவைகள் வாங்கி வருவான். அழகு அழகான வளையல்கள் வாங்கிக் கொடுப்பான். அவ்வளவு குதூகலத்துக்கும் இடையே இருவர் மனத்திலும் ஏக்கம் குடிகொண்டிருக்கும்.

இந்தத் தடவையும் கணவன் புறப்படும்பொழுது, கண்ணம்மாள் துக்கத்தை அடக்கிக்கொண்டு முகத்தில் புன்சிரிப்பை வரவழைத்துக் கொண்டாள். இலையைப் போட்டு அன்னம் படைத்தாள். சுப்பையாவும் சாப்பிட்டுவிட்டு வழக்கம்போல் துணிமணிகளை மூட்டையாகக் கட்டிக் கொண்டான். ‘போய் வருகிறேன்’ ‘போய் வருகிறேன்’ என்று பல தடவை சொல்லி விட்டுப் பிரிய மனமில்லாமல் புறப்பட்டான்.

சுப்பையா கரையிலிருந்த படகை நோக்கி நடந்து கொண்டிருந்தான். அவன் பெரு நடை போட்டுக்கொண்டு, நடந்து செல்

வதை வாசற்படியில் இருந்தபடியே கண்ணம்மாள் கண் கொட்டாமல் பார்த்தாள். இது மாதிரி கலங்கிய கண்களுடன் எவ்வளவோ தடவை பார்த்திருக்கிறாள். ஒவ்வொரு தடவையும் அவள் மனதை சொல்லமுடியாத ஏக்கம் ஒன்று வாட்டிக் கொண்டிருந்தது. அது, கணவன் பிரிவாற்றாமையை விடத் தாங்கமுடியாத ஒரு ஏக்கம். அதாவது, தன்னிடம், 'போய் வருகிறேன்' என்று சொல்லிக் கொண்ட பிறகு படகில் ஏறிக் கொள்ளும்வரை ஏன் ஒரு தடவைகூடத் திரும்பிப் பார்ப்பதே இல்லை? பிரியும் போது, ஒரு தடவையாவது திரும்பிப் பார்த்துப் புன்னகை செய்யக் கூடாதா? அவன் திரும்பி வரும்வரை அந்த முகத்தையாவது ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கலாமே?

ஒவ்வொரு தடவையும் கண்ணம்மாள் இவ்விதம் கேட்டுக்கொண்டு அவளே சமாதானமும் செய்துகொள்வது வழக்கமாகி விட்டது. ஊருக்குப் புறப்படும்போது திரும்பிப் பார்க்கக் கூடாது என்று ஏதாவது சாஸ்திரம் இருக்குமோ? அப்படியானால் அவர் திரும்பியே பார்க்க வேண்டாம்; பத்திரமாய்த் திரும்பி வந்தால் போதுமானது.

இவ்விதம் யோசித்தபடியே நின்று இந்தத் தடவையும் கணவன் செல்வதைப் பார்த்துக் கொண்டிருந்தாள். 'இந்தத் தடவையாவது கணவன் திரும்பிப் பார்த்துப் புன்னகை செய்தால் எவ்வளவோ சந்தோஷமாய் இருப்பேனே' என்று அவள் உள்ளம் வழக்கம்போல் ஏங்கியது. — 'கூடாது, கூடாது, அவர் திரும்பிப் பார்க்கவே வேண்டாம். எப்படியாவது சௌக்யமாய்த் திரும்பி வரட்டும்' என்று வழக்கம் போலவே சமாதானம் செய்து கொண்டாள்.

இப்படி அவள் நினைத்தபோதுதான், தான் எதிர்பாராதது நடந்தது; கண்ணம்மாள் என்ன பயந்து கொண்டிருந்தாளோ, அதுவே நடந்து விட்டது! அதாவது இந்தத் தடவை சுப்பையா திரும்பிப் பார்த்துக் கண்ணம்மாளை நோக்கிப் புன்னகை செய்தான். 'போய் வருகிறேன்' என்பதற்கு அடையாளமாகக் கையையும் ஆட்டினான். கண்ணம்மாளுக்குத் திக்கென்றது. "ஐயோ! இங்கே வாருங்களேன்!" என்று உரக்கக் கூப்பிடுவதற்கு வாயெடுத்தாள். ஆனால் நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டது. திக்பிரமை பிடித்து அப்படியே கல்லாகி நின்றாள்.

சுப்பையா படகைச் சமுத்திரத்தில் தள்ளி விட்டு, ஏறிக்கொண்டு, பாய் விரித்ததை, இமை கொட்டாமல் பார்த்தபடி நின்றாள். படகு தூரத்தில் மறைந்ததும்தான் கண்ணம்மாளுக்குச் சுய நினைவு வந்தது. குபீரென்று அழுகை பொத்துக்கொண்டு வர, உள்ளே ஓடிப்போய்க் கீழே விழுந்து, "காளியாயி, நீதான் என் புருஷனைக் காப்பாத்தணும்" என்று தேம்பினாள்.

இதற்குப் பிறகு, கண்ணம்மாளுக்கு இரவெல்லாம் பகலாகி விட்டது. 'கணவன் திரும்பி வருவாரோ?' என்ற சந்தேகமும், 'ஏதேனும் ஆபத்து நேர்ந்திருக்குமோ' என்ற பயமும் அவளைத் தூக்கமில்லாமல் செய்து விட்டது.

பதினைந்து, இருபது நாட்கள் ஆயின. இன்னும் சுப்பையா வந்து சேரவில்லை. கண்ணம்மாளுக்குப் பைத்தியம் பிடித்து விடும்போலாகி விட்டது. ஜப்பான் சண்டை ஆரம்பமாகி விட்டதென்றும், இனிமேல் யாரும் படகு ஓட்டக்கூடாதென்று சர்க்கார் உத்தரவு போட்டிருப்பதாகவும் வாசலில் யாரோ தமுக்குப் போட்டுக்கொண்டு போனதைக் கண்ணம்மாள் கவனிக்கவில்லை. ஆனால் ராத்திரி வேளையில் சில படகோட்டிகளைச் சமுத்திரத்தில் சுட்டு விட்டார்களென்று கேள்விப்பட்டதும் கண்ணம்மாள் துடியாய்த் துடித்துப் போனாள்.

ஒருநாள் கண்ணம்மாள் திடுக்கிடத்தக்க செய்தியொன்றைக் கேள்விப் பட்டாள். சுப்பையா உள்ளூர்ப் போலீஸ் தாணாவில் இருக்கிறான் என்பதுதான் அந்தச் செய்தி. கண்ணம்மாள் போலீஸ் தாணாவைப் பார்க்க ஓட்டமாக ஓடினாள். அங்கே நின்றுகொண்டிருந்த சுப்பையாவின் காலில் விழுந்து 'ஹோ' என்று கதறிவிட்டாள். 'கண்ணம்மா! அழாதே, எழுந்திரு! இந்தா ரூ. 500! சர்க்கார் எனக்கு வெகுமானமாகக் கொடுத்திருக்கிறார்கள். நேற்று ராத்திரி படகில் நான் திரும்பிக்கொண்டிருந்த போது சில ஜப்பான்காரர்களைப் பார்த்தேன். அவர்களைப் போலீசாரிடம் பிடித்து கொடுத்ததற்காகப் பரிசு கிடைத்திருக்கிறது!" என்றான் சுப்பையா.

ஆனால் கண்ணம்மாள் அதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. "இனிமேல் என்னை விட்டுப் போகமாட்டாயே?" என்று கதறினாள். "அதுதான் எனக்கு இந்த ஊர் உப்பளத்திலேயே வேலை கொடுத்து விட்டார்களே! இனிமேல் போகமாட்டேன், எழுந்திரு!" என்று அவளைத் தேற்றினான் சுப்பையா.



# கலியாண ஊர்வலம்

ராஜி

சிங்க ராஜாவுக்கு ஒரே பெண். அந்தப் பெண்ணுக்குக் கலியாணம் என்றால் கேட்க வேண்டுமா? காடு முழுவதும் ஒரே அமர்க்களம்தான். வெளியூரிலிருந்த சிங்க ராஜாவின் உறவினர்கள் யாவும் கல்யாணத்திற்கு இரண்டு நாள் முன்னதாகவே வந்து விட்டன. சிங்க ராஜாவின் பெண்ணுக்குக் கல்யாணம் நிச்சயமாகிவிட்டது என்று கேட்டவுடன், அரண்மனையில் வேலை பார்க்கும் எல்லாப் பிராணிகளும் இராப் பகலாகக் கல்யாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து வந்தன.

எல்லோரும் அரண்மனைக்கு வந்து கல்யாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருக்கும் பொழுது நரியார் மாத்திரம் வராமலிருந்தது. அதற்கு மிகவும் வருத்தத்தை அளித்தது. "இதென்ன இது, அவ்வளவு அவமரியாதை? கல்யாணப் பத்திரிகை அவருக்கு முன்பாகவே அனுப்பி இருந்தும் கலியாணம் நிச்சயம் ஆனதைப் பற்றிக் கூடத் தன் சந்தோஷத்தைத் தெரிவிக்க இங்கு வரவில்லை. இவருக்குத் தகுந்த பாடம் கற்பிக்கின்றேன்" என்று கர்ஜனை செய்தது. சிங்க ராஜாவின் கர்ஜனையைக் கேட்ட சிங்க ராணி கூடப் பயந்துவிட்டது.

சிங்க ராஜாவுக்குக் காட்டில் நல்ல பெயரே இல்லை. ராஜாவைக் கண்டால் காட்டில் உள்ள ஒரு மிருகத்திற்குக் கூடப் பிடிப்பதில்லை. சிங்க ராஜாவின் கோபத்துக்குப் பயந்து மற்ற மிருகங்கள் நடந்தனவே தவிர சிங்கத்தின் மீது உள்ள பிரியத்தினால் அல்ல.

சிங்க ராஜா தன் சேவகர்களைக் கூப்பிட்டு "உடனே போய் நரியாரைக் கையுடன் இழுத்து வா! இக் கல்யாணத்திற்கு நரியாரை ஏதாவது உதவி செய்யும்படி செய்யாவிட்டால் என் பெயர் சிங்கம் அல்ல" என்று கர்ஜித்தது.

சற்று நேரத்தில் சேவகர்கள் நரியாரை அரசன் சிங்கத்தின் முன் கொண்டு நிறுத்தினர். நரியார் உடம்பில் ஒரு போர்வையைப் போர்த்திக் கொண்டு நல்ல ஜுரம் அடிப்பது போல உடம்பை நடுக்கிக் கொண்டிருந்தது. அதைப் பார்த்த ராஜா "நரியாரே! ஏன் என் வீட்டுக் கல்யாணத்திற்கு வந்து ஒரு உதவியும் செய்யாமலிருக்கிறீர்?" என்று கர்ஜனை செய்தது. அதற்கு நரி "அரசே! நான் வராமல் என்ன? எனக்கு இரண்டு நாளாகக் குளிர் ஜுரம்" என்று கை கூப்பி வணங்கிச் சொல்லிற்று.

நரியாருடைய பாசாங்கை எளிதில் அறிந்து கொண்ட சிங்க ராஜா "நரியாரே! உம்மால் சரீர ஒத்தாசை செய்ய முடியாவிட்டாலும் வேறு ஏதாவது உதவி ஆக வேண்டும்" என்று உத்தரவிட்டது. "வேறு விதமாக எனக்கு உதவி செய்ய ஒன்றும் இல்லையே" என்று நரி பதில் சொல்லிற்று. உடனே சிங்க ராஜா சற்று யோசித்து விட்டு "உன் வீட்டில் வண்டி மாடுகள் இருக்கின்றனவே, அவைகளில் இரண்டை இன்று சாயங்காலம் அனுப்பி வையும். ஊர்வலத்திற்காக அலங்கரிக்கப்பட்டிருக்கும் ரதத்தில் கட்டி





ஓட்டச் செய்து உபயோகப்படுத்திக் கொள்ளுகிறேன்" என்று அரசன் சொல்ல, நரியார் யோசனை செய்து விட்டுப் பேசாமல் வீடு திரும்பியது.

அன்று இரவு ராஜா சிங்கத்தின் வீட்டு வாசலில் ஒரே தடபுடல். நரியார் வீட்டிலிருந்து வந்த இரண்டு மாடுகளையும் சிங்கராஜா ரதத்தில் கட்டச் செய்தது. நரியாரும் அங்கு நின்று கொண்டிருந்தது. "ஊர்வலம் புறப்படட்டும்" என்று சிங்க ராஜா சொல்லியது தான் தாமதம். ரதத்தில் கட்டியிருக்கும் மாடுகள் ஓட்டப்பட்டன. அவ்வளவு தான்! ரதத்தில் கட்டிய மாடுகள் பத்து அடிகள் முன்னே போனதும் பத்து அடிகள் பின்னாடி நடந்து வர ஆரம்பித்தன. ரதம் ஓட்டுபவன் மாடுகளின் வாலை முறுக்கியும் மறுபடியும் பத்து அடிகள் முன்னே போன மாடுகள் பத்து அடி பின்னாடி வந்தன. வெகு நேரம் ஆகியும் ஊர்வலம் கிளம்பிய இடத்திலேயே இருக்கவே அங்கு கூடியிருந்த மிருகங்கள் பரிகாசமாகச் சிரித்தன.

இதைப் பார்த்த சிங்க ராஜாவுக்குக் கோபம் வந்தது. நரியார் தன்னை வேணுமென்றே அவமானப்படுத்தியதைத் தெரிந்து கொண்டு நரியாரைக் கூப்பிட்டு, "இதென்ன? நீ அனுப்பிய மாடுகள் பத்து அடி முன்னாடி போனால் பத்து அடிகள் பின்னால் வருகின்றனவே? என்னை நீங்கள் அவமானப்படுத்தியதற்கு உன்னை இதோ சிறையில் அடைக்கிறேன் பார்" என்று கர்ஜித்தது. இதைக்கேட்ட நரியார் "அரசே! கோபிக்க வேண்டாம். தப்பு என்மீது இல்லை. இம் மாடுகளை நான் என் வீட்டில் கிணற்றிலிருந்து தண்ணீர் இறைக்கும் ஏற்றத்திற்கு உபயோகப் படுத்திக் கொண்டு வருகிறேன். கிணற்றிலிருந்து தண்ணீர் எடுக்கும் போது மாடுகள் பின்னேயும் தண்ணீர் வெளியே இறைக்கும்போது முன்னேயும் வருவது வழக்கம். அவ் வழக்கப்படியே ஊர்வலத்திலும் வந்தன" என்று சொல்ல சிங்கராஜாவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. நரியாரின் சாமர்த்தியத்தை மெச்சி நரியாரையே மந்திரியாக வைத்தது.




எடை நிறுக்கும் மெஷினைப் பழுது பார்ப்பதற்காக வந்தவர் என்னென்னவோ செய்து பழுது பார்த்து விட்டு ஒரு அணா போட்டு தம்முடைய எடையைப் பார்க்கிறார். எடை தெரிய வில்லை. எனவே, பழையபடி 'ரிப்பேர்' போர்டை மாட்டிவிட்டுச் செல்கிறார்!



# ஆடல் பாடல்



## தஞ்சாவூர்த் தியாகராஜன்

இசைத் தேனீ

தற்காலம் சங்கீதத் துறையில் ஏற்பட்டிருக்கும் பக்துவிரும் பேராதரவும் காரணமாகப் பல இளம் பாடகர்கள் முன்னுக்கு வரப் போட்டி யிட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் சங்கீதம் கற்றோரெல்லாம் கலைவாணர்களாகி விடுவதில்லை. சாரீர வசதி, ஞான பாவம், பெரிய இடத்துப் பயிற்சி, எல்லாவற்றிற்கும் மேலாகக் கேட்போரை வசீகரிக்கும் அழகு பாணி முதலிய பல அம்சங்கள் பொருந்தி அமைய வேண்டியிருக்கிறது. பெரும்பான்மையோரிடம் ஒன்றிருந்தால் மற்றொன்று இருப்பதில்லை. அப்படிப் பொருந்தி யிருக்கும் பாக்கியம் பெற்றோர் மிகச் சிலரே. அத்தகையோரில் தஞ்சாவூர் டி. எம். தியாகராஜன் ஒருவர் என்பது அவர் கச்சேரியை ஒரு தரம் கேட்டாலே தெரிந்து விடும்.

ரசிகர்கள் அவருடைய சங்கீதத்தைச் சில தடவை ரேடியோவில் கேட்டிருப்பார்கள். அதிலிருந்தே அவர் கலை உயர்ந்த ரகத்தைச் சேர்ந்ததென்று விளங்கி யிருக்கும். ஜூன் 17ல் சென்னைத் தமிழிசைச் சங்கத்தின் ஆதரவில் செயிண்டு மேரீஸ் மண்டபத்தில் அவரை நேரிலேயே கேட்கும் சந்தர்ப்பம் வாய்த்தது. அதுதான் அவருக்குச் சென்னை சங்கீத சபா மேடையில் கிடைத்த முதல் கச்சேரி போலும். அன்று அவர் அளித்த இசை விருந்தை அனுபவித்த பின்பு அவருடைய கலைச் சிறப்பைக் குறித்து அரைகுறைச் சந்தேகங்கள் ஏதாவது முன்பு இருந்திருந்தால் அவையும் நீங்கி யிருக்கும்.

அது மாத்திரமே அல்ல. சாத்திரமும் இயற்கை ரஞ்சகமும் கொண்ட சாரீரம் படைத்திருப்பது அவரது பாக்கியம். அத்துடன் பெரிய இடத்துச் சிக்ஷையும் தன் முயற்சியும் சேர்ந்து விட்டால் கேட்க வேண்டுமா? அன்றையத் தமிழ் இசைச் சங்கக் கச்சேரி ஆரம்ப முதல் இறுதிவரை தெவிட்டாத இன்பம் கொடுத்தது. ராகங்களையும் ஸ்ருதிகளையும் தன் னிச்சயத்துடன் அலட்சியமாகக் கையாண்டார். கற்பனைக்குக் குறைவில்லை. கற்பனைப் பெருக்கும் பாடிய முறையும் பல தடவை அவருடைய குருவை நினைவூட்டின.

சாரீர நயத்தினாலும், சாதக பலத்தினாலும், சஞ்சாரங்களைப் பங்கீடு பண்ணிப் படிப்படியாக அடுக்கும் திறமையினாலும் தொட்டதெல்லாம் மனங் கவரும் பாணியழகு கொண்டிருந்தது. குருவைப்போலவே எடுத்ததும் ராகஸ்வரூபங்களை எளிதில் விளக்கும் அவருடைய சாதுர்யம் மெச்சத்தக்கது. பந்துவராளி, தோடி ராகங்கள் வனப்பா யிலங்கின. கல்யாணியில் தக்கு தடை யில்லாத உருவப்படியுடனும் போதிய வளைவு குழைவுகளுடனும் மூன்று ஸ்தாயியிலும் சரளமாய்க் கற்பனை நிறைந்த வேலைப் பாடுகளை அள்ளி வீசினார். பல்லவி ராகமாய் எடுத்துக் கொண்ட காம்போதி எல்லாவற்றையும் தூக்கியடித்தது. உருப்படிகள் தாளக்கட்டும் விறுவிறுப்புங் கொண்டு கச்சிதமா யிருந்தன. நிரவல் ஸ்வரங்களில் ஜமாய்த்துத் தள்ளி விட்டார்.

வயது இளமையாயினும், கலைத் தேர்ச்சியில் முதிர்ந்தவராகவே தென்பட்டார். சில காலம் சங்கீத மேடையிலேயே ஒரு பெரும் புரட்சியை உண்டாக்கித் தனிப் பெருமையுடன் விளங்கி வந்த செம்மங்குடி ஸ்ரீனிவாசய்யரின் சிஷ்யர் என்றாலே ஒரு தனி மதிப்பு ஏற்பட்டு விடும். ஆனால்,



இளம் வயதுக்கு ஏற்ப மொத்தத்தில் மத்யம காலமே பெரும்பாலும் காணப்பட்டது. ஆனால் அதற்காக, விவரமற்ற பிர்க்காவோ, ஓட்டமோ இல்லாது. ஆங்காங்கே நிதானமும் அழுத்தமும் கமக ஜாலிக்குகளும் கலந்திருந்தன. எனவே அவருடைய சங்கீதம் ஞானச் சிறப்புடன் பல இடங்களில்

பாவப் பொழிவும் கொண்டிருந்தது. அங்க சேஷ்டைகள் இல்லை. மேல் ஸ்தாயி சஞ்சாரங்களில் கை வீசுவதைத் தவிர, வேறு அபிநயங்கள் அதிகம் காணப்படவில்லை.

இதற்கு முன் கேட்ட ரேடியோக் கச்சேரிகளில், ராக பாவப் பொழிவிலும் கற்பனைப் பெருக்கிலும் சாஹித்யத் தெளிவிலும் போதியவாறு கவனம் செலுத்தவில்லையோ என்ற சந்தேகம் கண்டதுண்டு. இக் குறை அவரிடம் மாத்திரமல்ல; கற்பனையும் சாதகமும் நிறைந்த பல பாடகர்களிடமும் காணப்படுகிறது. ஞான பாவ வேலைப்பாடுகளில் தம் திறமையைக் காட்டும் ஆற்றலில், சாஹித்யத்தை மழுப்பி உருத் தெரியாது பாடும் பிரபல வித்வான்கள் பலர் இருக்கிறார்கள். ராகபாவத்தில் சொக்குவதோடு, சாஹித்யத்தையும் தெளிவாயும் சுயமாயும் வழங்கினால் அதிலிருந்து எழும் உணர்ச்சி பிரத்யேகம் என்பதையும், ஞானஸ்தர்களைப் பிரமிக்க வைப்பதோடு பாமரரையும் பரவசப்படுத்தும் தன்மையும் உயரிய சங்கீதத்துக்கு இன்றியமையாதது என்பதையும் எல்லா வித்வான்களும் உணர்ந்து பாடுவதில்லை. ஸ்ரீ தியாகராஜனது இசைச் சங்கக் கச்சேரியில் மேற்படி குறை அதிகம் காணாவிடினும் சாஹித்யத்தைப் பதம் பிரிக்கும்போது போதிய கவனம் செலுத்தவில்லை என்று மாத்திரம் தோன்றியது. உதாரணமாக 'ஆடும் சிதம்பரமோ' என்ற அடியில் 'ஆடும் சிதம்—பரமோ' என்று பிரித்து இரண்டாவது பதத்தில் 'ப'வை அழுத்தி யடித்துப் பாட வேண்டியதில்லை. அவருக்கு அமைந்திருக்கும் பல லக்ஷணப் பொருத்தங்களைக் கவனிக்கும்போது, ராகங்களை இன்னும் விரிவான 'பிளான்' போட்டுப் பாடலாமென்றும் தோன்றியது. மற்றப்படி கச்சேரி மொத்தத்தில் சுகமாயிருந்தது. வெகு சீக்கிரம் முன்னணிக்கு வரக்கூடியவர் என்பதில் சந்தேகமில்லை. அன்று அவருக்கு மிருதங்கம் வாசித்த ஸ்ரீ நடராஜ சுந்தரம் பிள்ளையின் திறமையும் பாராட்டத் தக்கது.




# கம்பர் தரும் காட்சி



## 106. இதென்ன கழுகு ?

அரக்கர்களது அக்கிரமத்தை ஒழிப்பதே தன்னுடைய லக்ஷ்யமானதால் பொதிகை மலைச் சாரலில் சுகவாசம் செய்வது பொருந்தாது, அரக்கர் வரக்கூடியதான இடத்திலேயே இருந்தால் தான் காரியம் கைகூடும் என்று ராமன் சொல்லவும் அப்படியே செய்யலாம் என்று அகஸ்திய முனிவர் அனுமதி கொடுத்தார். பஞ்சவடியே வசிப்பதற்கும் எல்லாக் காரியங்களுக்கும் சௌகரியமான இடம் என்று சொல்லி விடை கொடுத்தார்.

சீதையோடும் லக்ஷ்மணரோடும் ராமன் பொதிகையிலிருந்து வடக்குத் திசையை நோக்கிச் செல்லுகிறான். அநேக காத தூரம் செல்லுகிறார்கள். வழியில் ஆறுகளும் அருவிகளும் எத்தனையோ! அருவிகளைப் பார்த்தால், படுத்திருந்த ஆறுகள் ஏதோ நிமிர்ந்து நின்றன போலத் தோன்றுகின்றன.

மலைகளும் எத்தனையோ! யானைகள் ஒன்றன்பின் ஒன்றாய்ப் போவதுபோல் மலைத் தொடர்கள் சில. ஆலோசனைக்காக யானைகள் வட்டமிட்டுக் கூடியிருந்தது போலவும் சில மலைகள்.

இத்தகைய பிரதேசங்களைப் பார்த்துக் கொண்டே வெகு தூரம் போய் விட்டார்கள்.

> நடந்தனர் காவதம்
>     பலவும்; நன்நதி
> கிடந்தன நின்றன,
>     கிரிகள் கேண்மையின்
> தொடர்ந்தன துவன்றின,
>     சூழல் யாவையும்
> கடந்தனர், — கண்டனர்
>     கழுகின் வேந்தையே.

[கிரிகள் கேண்மையின் தொடர்ந்தன: மலைகள் ஒன்றன்பின் ஒன்றாய் ஏதோ அபிமானத்தோடு தொடர்ந்து போவது போல் தோன்றின; துவன்றின: நெருங்கிக் கிடந்தன — கூட்டம் போட்ட மாதிரி; சூழல்: பிரதேசம்; கண்டனர் கழுகின் வேந்தையே: கழுகுகளுக்கு அரசனாகிய ஜடாயுவை எதிரே பார்த்தார்கள்.]

ஜடாயுவை எப்படிக் கண்டார்கள் என்பதைப் பார்க்கலாம்:

பல மலைகளுக்கிடையே கருங்கல் மலை ஒன்று முன் ஏறி நின்றது. அதன் மீது கழுகரசனாகிய ஜடாயு நிற்கிறான்.

> முந்தொரு கருமலை
>     முகட்டு முன்றிலின், —
> சந்திர னொ(டு)ஒளி
>     தழுவச் சாத்திய,
> அந்தரில் கனைகடல்
>     அமரர் நாட்டிய
> மந்தர கிரிஎன
>     வயங்கு வான்தனை.

[முந்து ஒரு கருமலை முகட்டு முன்றிலின்: முன்னேறி நின்ற ஒரு கருமலைச் சிகரத்தின் மேலிருந்த முற்றப் பரப்பில்; சந்திரனொடு ஒளி தழுவச் சாத்திய: பாற்கடலைக் கடைவதற்குச் சந்திரனையே புற அணையாகச் சாத்தினார்கள்; அந்தச் சந்திரனது பிரகாசம் மத்தாகிய மந்தரகிரி மேல் விழுந்தது. அந்த மந்தரகிரி போலப் பிரகாசத்தோடு நிற்கிறான் ஜடாயு; அந்தரில் கனைகடல் அமரர் நாட்டிய: ஒரே பரப்பாயுள்ள ஒலிக்கிற பாற்கடலில் தேவர்கள் நிறுத்திய.]

ஜடாயுவின் உருவந்தான் மந்திரகிரி போல் இருக்கிறது. கண் எப்படிப் பட்டது? மந்திரி ஒருவன்: அபூர்வ

மான கல்வி கேள்வி வாய்மை நுண்ணறிவு எல்லாம் படைத்தவன்; ராஜாங்கக் காரியங்களை ரொம்பவும் தீர்க்க திருஷ்டியுடன் எட்டிப் பார்ப்பவன்.

நாய்மையின் இருங்கலை
துணிந்த கேள்வியன்,
வாய்மையன், மறுவிலன்,
மதியின் கூர்மையன்,
ஆய்மையின் மந்திரத்(து)
அறிஞ ருமெனச்,—
செய்மையின் நோக்குறு
சிறுக ணான்தனை.

[நாய்மையின் இருங்கலை: தர்மங்களை நிர்ணயிப்பதான விரிந்த விஷயங்களை; துணிந்த கேள்வியன்: நேர் முகமாக ஆராய்ந்து கண்டவன்; வாய்மையன்: சத்தியத்தைச் சாதனமாகக் கொண்டவன்; மறுவிலன்: வாழ்க்கையில் யாதொரு பழுதும் இல்லாதவன்; மதியின் கூர்மையன்: அறிவானது தானாகவே நுட்பமாக வேலை செய்யும் திறந்தது; ஆய்மையின் மந்திரத்து அறிஞருமென: நிர்வாக விஷயங்களை ஆராயும் ஆலோசனை சபைக்குப் பிரத்தியேகமாக வைத்த யோசனையாளன் ஒருவனைப் போல; செய்மையின் நோக்குறும்: தூரத்திலுள்ள விஷயங்களைப் பார்க்கக் கூடிய; சிறுகண்ணான்தனை: சிறிய கண்ணை உடைய ஜடாயுவை.]

கண் இப்படி; அவனுடைய அலகு எப்படிப் பட்டது?

அரக்கர்களைக் கொன்று வேண்டிய மட்டும் எமனுக்கு விருந்து செய்து மிஞ்சிய மாமிசத்தை விழுங்குகிற தொழிலாம் அந்த அலகுக்கு.

வீட்டிவான் அவுணரை,
விருந்து கூற்றினுக்(கு)
ஊட்டி,வீழ் மிச்சில்தான்
உண்டு, நான்தொறும்
நீட்டி,மேல் இந்திரன்
சிறுகண் யானையின்
தோட்டிபோல்த் தேய்ந்(து)ஒளிர்
துண்டத் தான்தனை.

[வான் அவுணர் வீட்டி: வான் எத்திய அரக்கர்களைத் துண்டம் துண்டமாக்கி; நாள் தோறும் நீட்டி: தினம் தினம் கற்பாறைகளில் தீட்டி; மேல் இந்திரன் சிறு கண் யானையின் தோட்டிபோல்: வானுலகத்து ஐராவதத்தை அடக்குவதற்காகக் கொண்ட அங்குசமே போல; தேய்ந்தொளிர் துண்டத் தான்தனை: தேய்ந்து தேய்ந்து ஒரே பளபளப்பாயுள்ள அலகை உடையவனை — ஜடாயுவை.]

குறிப்பு:— அலகு வெகு கடினமானது. அதன் வேலையும் அப்படித்தான் என்பதைச் செய்யுளின் ஓசை (வீட்டி, ஊட்டி, நீட்டி, தோட்டி) எடுத்துக் காட்டுகிறது.

இருநூறு அடி உயரமும் குறுக்களவும் கொண்ட கருங் குன்று. அதன் மேலுள்ள கழுகு ஏதோ அறுபதடி உயரம். அதன் அலகின் நீளம் இரண்டு பாகம். அப்படியானால் ஜடாயுவின் தோற்றம் எப்படி யிருக்கும்! மானவ உலகத்துக் கழுகு அது. அதன் பெருமிதத்தை அவ்வளவா நமக்கு விளக்க வேண்டும்? கவிஞர் இன்னும் பேசுகிறார். அடுத்த இதழில் பார்க்கலாம்.

---

ஒரு அயர்லாந்துக் கதை: சில தொழிலாளிகள் ஒரு பெரிய பள்ளம் தோண்டிக் கொண்டிருந்தார்கள். தொழிலாளிகள் சுறுசுறுப்பாக வேலை செய்யாததைக் கண்டு மேஸ்திரி, "எல்லாரும் வெளியே வாருங்கள்" என்றான். எல்லாத் தொழிலாளிகளும் வெளியே வந்தார்கள். "சரி, குழியில் குதியுங்கள்" என்றான். அப்படியே குழியில் குதித்தார்கள். மீண்டும், "எல்லாரும் வெளியே வாருங்கள்" என்றான். அப்படியே எல்லாரும் வெளியே வந்தார்கள். பிறகு "திரும்பவும் குழியில் குதியுங்கள்" என்றான். அப்படியே குதித்தார்கள். மேஸ்திரி மேலும் மேலும் இப்படியே மாறி, மாறி உத்தரவு போட்டதைக் கண்டு, ஒரு தொழிலாளி, அதன் கருத்து என்ன என்று அவனை விசாரித்தான். அதற்கு அந்த மேஸ்திரி, "உங்கள் பூட்ஸ் காலில் ஒட்டிக்கொண்டு வெளியே வரும் மண் கூட உங்கள் மண்வெட்டியில் வரமாட்டேன் என்கிறது" என்றான்.

★



★






## தமீனா

[ஆசிரியர்: பெர்துஸி; தமிழில் எழுதியவர்: ''சுந்தர குமாரன்''; பிரசுரம்: மங்கள நூலகம், நுங்கம்பாக்கம், சென்னை; விலை: ரூ. 1—0—0.]

பாரசீகக் கவிஞன் பெர்துஸி எழுதிய ''ஸோராப்-ருஸ்தம்'' என்ற காவியத்தில் அடங்கியிருக்கும் கதையை 'சுந்தர குமாரன்' தமிழிலே எழுதியிருக்கிறார். நல்ல கதை. தமிழ் நடை சில இடங்களில் பழைய பண்டிதர்களையும் தோற்கடிப்பதாய் இருக்கிறது. உதாரணமாக, குதிரை என்ற சொல்லுக்கு அகராதியிலுள்ள எல்லா வார்த்தைகளையும் புத்தகத்திலே நுழைத்து நம்மைத் திகைக்க வைக்கிறார் ஆசிரியர்.

## தொழிலரசு (மே தின மலர்)

[ஆசிரியர்: எம். கல்யாணசுந்தரம்; விலாசம்: ''தொழிலரசு'' காரியாலயம்; பொன்மலை, திருச்சி.]

தென்னிந்திய ரயில்வேத் தொழிலாளர் நடத்தும் மாதமிரு முறைப் பத்திரிகையின் விசேஷ மலராகிய இந்த மே தின மலரில், தொழிலாளர் வாழ்க்கை சம்பந்தமான பல நல்ல கதைகளும் கட்டுரைகளும், கவிதைகளும் சித்திரங்களும் அடங்கியிருக்கின்றன. ரயில்வே சம்பந்தமான சில புள்ளி விவரங்களும் செய்திகளும் ரசமாக அமைந்திருக்கின்றன. தொழிலாளர் வாழ்க்கையில் சிரத்தை கொண்டுள்ள ஒவ்வொருவருக்கும் உபயோகமான பத்திரிகை.

## ஸ்ரீமத் பகவத் கீதை

[உரை ஆசிரியர்: ''அண்ணா,'' பிரசுரம்: ராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை; விலை: ரூ. 4]

கீதை சம்பந்தமான எல்லாச் சந்தேகங்களையும் தெளிவாக்குவதற்கு இது ஓர் அற்புதமான நூல். முதலில் நாகரி எழுத்திலும், பின்பு தமிழ் எழுத்திலும் ஒவ்வொரு சுலோகத்தையும் கொடுத்து, அதற்குத் தமிழிலே பொருள் எழுதியிருக்கிறார்கள். அது மாத்திரமல்ல, வடமொழி தென்மொழி நூல்களிலிருந்து மேற்கோள்களையும் குறிப்புரைகளையும் கொடுத்திருக்கிறார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தார் செய்து வரும் அருமையான தமிழ்த் தொண்டுகளிலே இதையும் ஒன்றாகக் கொள்ளலாம்.

## புராதன நாகரிகம்

[ஆசிரியர்: அ. ராமய்யர் எம். ஏ.; பிரசுரம்: ஸ்டார் பிரசுரம், பாலக்கரை, திருச்சி; விலை: ரூ. 1-4-0.]

திருச்சி வானொலி நிலையத்தில் ஆசிரியர் மாணவர்களுக்காகச் செய்த ஏழு பிரசங்கங்களின் தொகுப்பு இந்தப் புத்தகம். எட்டாவதாக, ஆசிரியர் சிறுவைப் பற்றி ஒரு குறிப்பு எழுதிச் சேர்த்திருக்கிறார். புத்தகத்தைப் படித்து முடித்ததும், ''வெள்ளைக்காரர்கள் நம்மை என்னமோ நாகரிகப் படுத்தி விட்டதாகப் பெருமையடித்துக் கொள்கிறார்களே! பார்க்கப் போனால், நாம் அல்லவா அவர்களை நாகரிகப் படுத்தியிருக்கிறோம்?'' என்று எண்ணத் தோன்றுகிறது. புத்தகத்தில் வெளியாகியிருக்கும் விஷயம் 'புராதன நாகரிக'மாயிருந்தாலும், புத்தக அமைப்பு புதிய நாகரிகமாய்த்தான் இருக்கிறது.

## ஸ்ரீமத் வால்மீகி முநிஹ்ருதய தத்வஸாரப் பிரகாசிகா

[ஆசிரியர்: பிரம்மஸ்ரீ ராமாயணம் சீதாராம சாஸ்திரிகள்; பதிப்பாளர்: யுனைடெட் பிரிண்டர்ஸ் லிமிடெட், திருச்சி; விலை: ரூ. 2-8.]

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தில் அநேக ஆக்ஷேபங்களைக் கிளப்பி அவைகளுக்கெல்லாம் வால்மீகியின் வாக்கைக் கொண்டே சமாதானம் கூறியிருக்கிறார் ஆசிரியர்.

கைகேயி தசரதனுக்கு இரண்டாவது மனைவியல்ல—கடைசி மனைவிதான் என்பது, லக்ஷ்மணன் ஆதிசேஷன் அல்ல என்பது, ஸ்ரீ ராமன் வாலியை மறைந்து அடிக்கவில்லை என்பது — இப்படியாகப் பல பிரச்னைகளை ஆராய்ந்திருக்கிறார்.

சாஸ்திரியாரின் ஆராய்ச்சிபூர்வமான ஆக்ஷேப சமாதானங்களை நாம் ஆக்ஷேபியா விட்டாலும், பிழை திருத்தத்தில் அகப்படாத இந்நூலிலுள்ள அச்சுப் பிழைகளை நாம் ஆக்ஷேபிக்கவேண்டியிருக்கிறது.

---

ஒரு காலேஜ் ப்ரொபஸர் தம் மாணவர்களுக்குக் கீழ்க்கண்ட உபதேசம் பண்ணினார்—

''நீங்கள் எல்லாரும் ஒரு காலத்தில் கல்யாணம் பண்ணிக்கொண்டு மண வாழ்க்கை நடத்துவீர்கள். அப்பொழுது உங்கள் மனைவிமார்களை வெகு அன்பாக நடத்துங்கள். நீங்கள் இரண்டு பேரும் எங்கேயாவது சேர்ந்து போகிறதாக இருந்து, குறித்த சமயத்தில் மனைவி தயாராக இல்லையென்றால், அதற்காக அவளைக் கடிந்து கொள்ளாதீர்கள். மனைவி புறப்படுவதற்குத் தயாராகும் வரை ஏதாவது நல்ல புத்தகம் ஒன்று எடுத்துப் படியுங்கள். இந்த உபதேசத்தைப் பின்பற்றினால், நீங்கள் உங்கள் வாழ்நாளில் வாசித்து முடிக்கும் புஸ்தகங்களின் எண்ணிக்கை உங்களுக்கே ஆச்சரியத்தை அளிக்கும்.''



# காலக்ஷேபம்

### வயிற்றுப் பிழைப்பு

இன்ஸ்பெக்டர் (திருடனைப் பார்த்து):—ஏண்டா திருடுகிறாய்?

திருடன்:—திருடவில்லைங்க, வயிற்றுப் பிழைப்புக்காகக் கை நீட்டி எடுத்தேனுங்க.

இன்ஸ்பெக்டர்:—அப்படியானால் ஏன் அவர்களைக் கேட்டு எடுக்கக் கூடாதா?

திருடன்:—அவங்கள் எல்லோரும் தூங்கிக்கொண்டு இருந்தாங்க! அவர்களை எழுப்பினால் தொந்தரவாகுமே என்று எழுப்பவில்லைங்க! —ஜி. ஏ. ஜானகிராமன்.

★

### சரியான பதில்!

ஓர் இலவச வாசகசாலை ஏற்படுத்துவதன் பொருட்டு நிதி வசூலிக்க ஒரு பொதுக் கூட்டம் கூட்டப்பட்டது. அக்கிராசனாதிபதி எழுந்து, "நண்பர்களே! உங்களாலியன்ற பண உதவியைச் செய்யக் கோருகிறேன்" என்று சொல்லி நிதி சேர்க்கும் உண்டியலைக் கொண்டு வந்து வைத்தார். எல்லோரும் தலா அரை ரூபாயும், ஒரு ரூபாயுமாகவே போட்டார்கள். முடிந்ததும் நிதியை எண்ணிப் பார்த்ததில் ரூ 156-0-9 இருந்தது. அக்கிராசனாதிபதி எழுந்து "இக் கூட்டத்தில் ஒரு கோமுட்டிச் செட்டியார் இருக்கிறார்" என்றார்.



"ஒருவரல்ல; மூன்றுபேர்களிருக்கிறோம்" என்று கூட்டத்திலிருந்து ஒருகுரல் வந்தது.

—ஆர். சௌரிராஜன்.

★

### சரியான நிறம்

புடவை வியாபாரி:—எந்த நிறத்தில் அம்மா புடவை வேண்டும்?

எஜமானி:—காப்பிக் கலரில் வேண்டும்.

வியாபாரி:—அம்மா, உங்கள் வீட்டில் காப்பிக்கு எவ்வளவு பால் சேர்க்கிறீர்கள்?

—கே. அர்கதன்.

### உண்மைதான்!

மனைவி:—தயவு செய்து உங்களுடைய மீசையை எடுத்து விடுங்கள். பார்க்கிறவர்கள் எல்லோரும் உங்களை ஹிட்லர் மாதிரி இருக்கு என்று கேலி செய்கிறார்கள்.

கணவன்:—அதனால் என்ன? எனக்கு ஹிட்லர் மாதிரி மீசை இருந்தாலும் நம் வீட்டுக்கு நீதானே சர்வாதிகாரி?

—கே. மகாதேவன்.

★

### சிறிய மாறுதல்

பிரதம நடிகர்:—நான் ஒப்பந்தம் செய்து கொண்ட கதையின் பெயரை மாற்றி விட்டீர்களாமே?

டைரக்டர்:—வேஷப் பொருத்தத்திற்காக ஒரு சிறு மாறுதல்தான் ஏற்பட்டது. மன்மத விஜயம் என்பதை ஹனுமார் விஜயம் என்று மாற்றியிருக்கிறேன்.

—எஸ். வி. சரஸ்வதி.

★

### ஏன் சொல்லவில்லை?

குமாஸ்தா:—சார், இன்று எனது மாமனார் இறந்து போய்விட்டார். தயவு செய்து எனக்கு லீவு கொடுங்கள்.

மானேஜர் (கோபத்துடன்):—நீ ஏன் என்னிடம் இரண்டு நாட்களுக்கு முன்னாலேயே சொல்லவில்லை?

—எம். எஸ். அன்னையா.

★

### காரணம்!

"அதோ போகிறாரே, அவர் வாரம் ஒரு நாள் உண்ணாவிரதம் இருக்கிறாராம்."

"ஏன், அவர் பெரிய யோகியோ?"

"இல்லை யில்லை! அவருக்குக் கொடுக்கப்படும் ரேஷன் அரிசி ஆறு நாட்களுக்குத் தான் காணுகிறதாம்!"

—கலாதாம்.

# சிநேகிதி வருகிறாள்!

நாடோடி

"பாரு அக்கா இருக்காங்களா?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்த அந்த வாண்டுப் பயலைக் கண்டதுமே நான் நடுநடுங்கிப் போனேன். "ஐயையோ! வந்ததா திரும்பவும் ஆபத்து?" என்று அலறினேன்.

அந்த வாண்டுப் பயல், "பாரு அக்கா இருக்காங்களா?" என்று கேட்டுக் கொண்டே எங்கள் வீட்டுக்குள் நுழையும் போதெல்லாம் நான் மாத்திரம் அல்ல, எங்கள் வீட்டில் இருப்பவர்கள் எல்லாருமே நடுங்கிப் போவார்கள்.

அந்த வாண்டுப்பயல் வேறு யாரும் இல்லை. பாருவின் சிநேகிதியின் தம்பி! யானை வரும் பின்னே, மணியோசை வரும் முன்னே அல்லவா? அதைப் போல பாருவின் சிநேகிதி நாளைக்கு எங்கள் வீட்டுக்கு வரப்போகிறாள் என்றால், வாண்டுப்பயல் இன்று கடிதத்துடன் வந்து விடுவான்!

உள்ளூரிலேயே இருக்கும் தங்கள் சிநேகிதிகளிடம் கடிதப் போக்கு வரத்து நடத்துவதற்குத் தங்கள் தம்பிமார்களைத் தபால் இலாகாவாக உபயோகப் படுத்துவது என்று இந்தப் படித்த பெண்கள் வைத்திருக்கிறார்கள். பாருவின் சிநேகிதி தன் தம்பியான அந்த வாண்டுப் பயலிடம் கடிதம் கொடுத்து அனுப்பினாள் என்றால், பாரு அரட்டைக்கல்வி பாலுவிடம் தன் கடிதத்தைக் கொடுத்து அனுப்புவாள். ஏன், என் தமக்கை கமலா இந்தக் காரியத்துக்கு என்னை எத்தனையோ தடவை உபயோகப்படுத்தி யிருக்கிறாள். உள்ளூரிலேயே இருக்கும் தன் சிநேகிதிகளுக்கு மாத்திரம் அல்ல, அவளுக்குக் கலியாணமான புதிதில், வீட்டிலேயே இருந்த அவள் புருஷனுக்கும் நான்தான் கடிதம் எடுத்துக் கொண்டு போக வேண்டும்!



இதையெல்லாம் எதற்காகச் சொல்ல வந்தேன் என்றால், தம்பிமார்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து ஒரு மகாநாடு கூட்டி, அக்காமார்கள் இழைக்கும் இந்த அநீதியைக் கண்டிக்க வேண்டும் என்பதற்காகத்தான். இது நிற்க.

தன் சிநேகிதி நாளைக்கு வருகிறாள் என்றால் பாரு இன்று முதலே ஆர்ப்பாட்டம் பண்ண ஆரம்பித்து விடுவாள்.

முதலில் கூடத்தில் மாட்டப்பட்டிருக்கும் எங்கள் தாத்தாவின் கல்யாணப் போட்டோவுக்கு ஆபத்து ஏற்படும். பழைய காலத்துத் தாத்தா, அதுவும் கல்யாணமான புதிதில் எப்படி இருந்திருப்பார்! அசட்டுப் பிசட்டு என்று குடுமிதானே வைத்துக் கொண்டிருப்பார்! ஆனால் அந்தப் போட்டோ தன் சிநேகிதியின் கண்ணில் பட்டால் அவள் எங்களை வெகு 'கர்நாடகம்' என்று நினைத்துக் கொண்டு விடுவாளாம்! அதற்காக அந்தப் போட்டோ கூடத்திலிருந்து எடுத்து அப்பால் ஒளித்து வைக்கப் படும்.

அடுத்தபடியாகக் கூடத்துச் சோபாக்களுக்குப் போடப்பட்டிருக்கும் பழைய விரிப்புகள் எல்லாம் எடுக்கப்பட்டுப் புதிய விரிப்புகள் போடப்படும். அத்துடன் சிநேகிதி வரும் வரையில் சோபாக்களில் யாரும் உட்காரக் கூடாது என்று உத்தரவும் போடப் படும்! சோபாவில் ஏறிக் குதித்து விளையாடித் துவைக்கும் அஜ்ஜிப்பயலுக்கும், அடங்காப்பிடாரிக்கும், ஏண்டா இந்த சிநேகிதி வந்து தொலைக்கிறாள் என்று இருக்கும்.

இதையெல்லாம் போனால் போகிறது என்று பொறுத்துக் கொள்ளலாம். ஆனால் அவள் மன்னியைப் பிடித்து வாட்டுவதுதான் எங்கள் ஒருவருக்கும் (அதாவது எங்கள் அப்பா நீங்கலாக) சகிக்காது.

வாண்டுப் பயல் வந்துவிட்டு, அப்பால் போகவேண்டியதுதான்; பாரு மன்னி

யைக் கையைப் பிடித்துக் கர கர என்று இழுத்துக் கொண்டு போவாள். "ஐயோ! நான் மடிடி! எதற்காக விழுப்போடு என்னைத் தொடறே?" என்று மன்னி அலறுவாள். ஆனால் பாரு மன்னியின் கதறலை லட்சியம் செய்ய மாட்டாள். மன்னியை 'டிரஸ்ஸிங் ரூ'முக்கு அழைத்துக் கொண்டு போய், கதவை உள்பக்கம் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு விடுவாள்.



கொஞ்ச நேரத்துக்கெல்லாம் உள்ளேயிருந்து மன்னியின் அலறல் காது கேட்கும்!

"ஐயோ! ஏண்டி என்னைப் போட்டுக் கொல்றே? என்னை விட்டுடி, என்னை விட்டுடி" என்று மன்னி கதறுவாள்.

முதல் தடவை இந்த மாதிரி நடந்த போது எங்களுக்கு விஷயமே புரியவில்லை. ஏதாவது புதுப் புடவை வாங்குவதற்குப் பணம் பிடுங்குவதற்காகப் பாரு மன்னியைப் போட்டு அடிக்கிறாளோ என்று நினைத்தோம். கடைசியில் கதவு திறந்து, மன்னியும், பாருவும் வெளியே வந்தபோது எங்களால் சிரிப்புத் தாங்கவில்லை.

வழக்கமாகப் பதினெட்டு முழம் புடவையைக் கொசுவம் வைத்து உடுத்தும் மன்னி பாருவின் பன்னிரண்டு முழப் புடவையை "காலேஜ் கர்ல்" பாணியில் கட்டிக் கொண்டு வெளியே வந்தாள். நாளைக்குத் தன் சிநேகிதி வரும் போது மன்னி அந்த மாதிரிதான் புடவை உடுத்திக் கொள்ள வேண்டும் என்று இன்றையிலிருந்தே ஒத்திகை!

"ஏண்டி இப்படியெல்லாம் மன்னியைப் பிடித்து வாட்டுகிறாய்!" என்று அப்பாவாவது பெண்ணைக் கடிந்து கொள்ளலாமோ, இல்லையோ! கிடையாது. மன்னியை இந்த உடையில் பார்க்கும்போது அப்பாவின் பல் முப்பத்திரண்டும் வெளியே தெரியும். மன்னி இத்தனை இளமைத் தோற்றம் அளிக்கிறாளே என்று அவருக்குப் பரம சந்தோஷம்!

"என்ன பாரு! மன்னியையும், உன்னையும் இப்பொழுது சேர்த்துப் பார்க்கிறவர்கள் அக்கா தங்கை என்று சொல்வார்களே யொழிய அம்மா, பெண் என்று சொல்ல மாட்டார்கள்!" என்பார்.

நாங்கள் எல்லாரும் அப்பாவைப் பழிப்பதற்காக, "ஆமாம், அப்பா! பாருவை அக்கா வென்றும், மன்னியைத் தங்கையென்றும் சொல்வார்கள்" என்போம். அப்பொழுது பார்க்க வேண்டுமே அப்பாவின் முகத்தில் காணப்படும் சந்தோஷத்தை!

அரச மரத்தைப் பிடித்த பிசாசு பின்னை யாரையும் பிடிக்காமல் விடுமா? மன்னிக்கு ஒத்திகை நடத்தி வைக்கும் பாரு எங்களையும் பிடித்து வாட்ட ஆரம்பித்து விடுவாள்.

அப்பா பீரோவைத் திறந்து அவர் நாளைக்குப் போட்டுக் கொள்ள வேண்டிய சூட், டை, பூட்ஸ் எல்லாவற்றையும் எடுத்து வைப்பாள். என்னுடைய பீரோவையும் திறந்து நான் போட்டுக்கொள்ள வேண்டிய உடைகளை எடுத்து வைப்பாள். சரசு என்ன புடவை கட்டிக் கொள்ள வேண்டும், அடங்காப் பிடாரி என்ன பாவாடை கட்டிக் கொள்ள வேண்டும், அரட்டைக் கல்லி பாலுவும், அஞ்சிப் பயலும் என்ன டிரௌஸர் போட்டுக் கொள்ள வேண்டும், இவை எல்லாவற்றையும் நிர்மாணிப்பது பாருவே.

சில சமயங்களில் இது விஷயமாகப் பாருவுக்கும், சரசுவுக்கும் சண்டை வந்து விடுவதும் உண்டு. அடுத்த நாள் கட்டிக் கொள்வதற்காக சரசு தனக்குப் பிடித்திருக்கிறது என்று ஒரு புடவை பொறுக்கி வைப்பாள். ஆனால் அந்தப் புடவை பாருவுக்குப் பிடிக்காது. இரண்டு பேருக்குமிடையே இது விஷயமாகப் பிரமாத சண்டை நிகழும். ஆனால் கடைசியில் பாரு கட்சிதான் ஜயிக்கும். "பாருவின் சிநேகிதிதானே வருகிறாள்! அதனால் பாருவின் இஷ்டப்படிதான் எல்லாரும் உடை உடுத்திக் கொள்ள வேண்டும்" என்று அப்பா அநியாயத் தீர்ப்புக் கூறுவார்.

முதல் நாள் அட்டகாசம் இப்படி யென்றால் அடுத்த நாள் சிநேகிதி வந்ததும் பாரு அடிக்கும் அட்டகாசம் சொல்லி முடியாது.



அவரவர்களுக்குப் பாரு என்ன இடம் குறிப்பிடுகிறாளோ,



"ஏண்டா அழுக்கரே? நன்னா வாயை விட்டுப் பாடேன்! எனக்கும் பின்னால் ஒருவன் இருந்துபாடுவதாகவே சபையில் ஒருவருக்கும் தெரியாது போலிருக்கே!"

அந்தந்த இடத்தில் அவரவர்கள் அவளால் குறிப்பிடப்பட்ட வேலையைச் செய்து கொண்டிருக்க வேண்டும்.

அப்பா சூட், டை, பூட்ஸ் முதலியவை போட்டுக் கொண்டு, வாசல் திண்ணையில் போடப்பட்டிருக்கும் நாற்காலி ஒன்றில் உட்கார்ந்து கொண்டு பத்திரிகை படித்துக் கொண்டிருக்க வேண்டும். பாதி நாட்களில் பாருவின் சிநேகிதிகள் சாயந்திர வேளையில்தான் வருவார்கள். பாவம், அப்பா, பாருவுக்காகக் காலையில் படித்து முடித்த பத்திரிகையையே திரும்பவும் எடுத்து வைத்துக்கொண்டு படிக்க வேண்டும்!

மன்னி, பாரு கட்டிவிட்ட புடவையுடன் ஏதோ காரியமாகப் போகிறவள் போல் வாசலுக்கு இரண்டு நடை வரவேண்டும். என்னவோ இரண்டு நடைதான். இரண்டு நடைக்கு மேல் மூன்றாவது நடை வந்து விட்டாளோ, பாருவுக்குக் கெட்ட கோபம் வந்து விடும்.

அரட்டைக்கள்ளியின் வேலை, சிநேகிதி வந்ததும் சைக்கிளை எடுத்துக்கொண்டு பக்கத்து ஹோட்டலுக்கு ஓடிப்போய்ப் பாரு குறிப்பிடும் பக்ஷணங்கள் வாங்கிக் கொண்டு வர வேண்டியது.

சரசுவின் வேலை, வீட்டுக்கு ஒரு சிநேகிதி வந்ததே தெரியாதது போல் வீணையை எடுத்துக்கொண்டு மீட்ட வேண்டியது.

அடங்காப் பிடாரியும், அஜ்ஜிப் பயலும் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டு பள்ளிக்கூடத்துப் பாடங்களைப் படிப்பது போல் பாவனை செய்யவேண்டியது.

ஒவ்வொரு தடவையும் தன் சிநேகிதி வரும்போதும் வீட்டையே இப்படி ஒரு ஆட்டு ஆட்டி வைப்பது என்று பாரு வைத்திருக்கிறாள். இந்த மன்னியாவது, அப்பாவாவது அவளைக் கண்டிப்பார்களா என்றால் துளிக்கூடக் கிடையாது. ஏனெனில் ஒவ்வொரு சிநேகிதி வந்து விட்டுத் திரும்பும்போதும் அப்பாவுக்கும் மன்னிக்கும் பாருவைப் பற்றி உண்டாகும் சந்தோஷம் சொல்லி முடியாது.

"ஒவ்வொருத்தி தலை மயிரை வாரி விட்டுக் கொண்டிருக்கிற கோரத்துக்கும், புடவை கட்டிக் கொள்ளுகிற வக்கிரத்துக்கும் நம் பாரு எவ்வளவோ தேவலை" என்று சொல்லிச் சொல்லி ஆனந்தப்படுவார்கள்.

★ ○ ★

# இது என்ன வார்த்தை?

ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் ஆகிய தேசங்களுக்கு 'அச்சு நாடுகள்' என்று பெயர் வரக் காரணம் என்ன? ஆங்கிலத்தில் 'Axis' என வழங்கும் பதத்தை 'அச்சு' என்று மொழி பெயர்த்திருக்கிறோம்.

'ஆக்ஸிஸ்' என்றால் லத்தீன் பாஷையில் 'அச்சு, இருசு' என்று அர்த்தம். உலகச் சக்கரம் ஜர்மனி முதலிய நாடுகளைச் சுற்றி ஓடுகிறது என்ற கருத்தினால் அவைகளுக்கும் 'அச்சு' எனப் பெயர் வைத்தார்களா? அல்லது உலகத்திலுள்ள சீமைகளெல்லாம் இந்த நாடுகளை அச்சாக வைத்துக் கொண்டு சுற்றிச் சுற்றி வருகின்றனவா? நேச தேசத்தினரைக் கேட்டால் இரண்டாவது சொன்ன காரணம்தான் என்று சாதிப்பார்கள்!

லத்தீனும் சம்ஸ்கிருதமும் ஓரினம். 'ஆக்ஸிஸ்' என்ற பதம் சம்ஸ்கிருதத்தில் 'அக்ஷ' என்று காணப்படுகிறது. இது தமிழில் 'அச்சு' எனத் திரிபு அடைந்திருக்கிறது. ஆங்கிலமும் தமிழும் வெவ்வேறு இனமாயினும் ஒரே இனத்துப் பாஷைகளிலிருந்து ஓர் பதத்தை ஸ்வீகரித்துக் கொண்டதால் அதன் ரூபம் அதிக பேதமின்றி யிருக்கிறது.—கே.எஸ்.என்



# அது ருசிகரமாகவும், திருப்தி அளிக்கக்கூடியதாகவுமிருக்க வேண்டியது . . . ஆனால் அது ஊக்கத்தை அளிக்கவும் வேண்டும்!









ஒவ்வொருவரும் எந்தெந்த பதார்த்தங்கள் ஊக்கமளிக்கக் கூடியவை என்பதை அறிந்திருக்க வேண்டும். டால்டா "குக்புக்" (ஆங்கிலத்தில் மட்டுமே எழுதியுள்ளது) உணவுப் பொருள்களின் தாரதாரத்தைப் பற்றியும், 150 இந்திய ஆகாரத் திட்டங்களைப் பற்றியும் விவரித்திருக்கிறது. உங்களிடம் ஒரு பிரதி இருக்கவேண்டியதவசியம். Dept. A133 P.O. Box No. 353 Bombay என்ற விலாசத்திற்கு 4 அணா ஸ்டாம்பு அனுப்புங்கள்.

நீங்கள் உங்கள் குடும்பத்திற்கு சமையல் செய்யும்பொழுது எப்பொழுதாவது இதைப் பற்றி யோசிப்பதுண்டா? உணவிற்கு சுவை மாத்திரமிருந்தால் போதாது— அதை உண்பவருக்கு ஊக்கத்தையும் கொடுக்கக்கூடியதாயிருக்கவேண்டும். சில உணவுகள் மற்றவைகளை விட ஊக்கமளிக்கக் கூடியவை. நாம் வழக்கமாக உட்கொள்ளும் பல ஆகாரங்கள் ஊக்கத்தை யளிக்கக் கூடியவைகளல்ல. அவை நம் ஆரோக்கியத்திற்கு உகந்ததல்ல. உண்மையில் அவைகள் முக்கியமாக குழந்தைகளுக்கு கெடுதல் செய்யவும் கூடும். ஆனால் ஆகாரங்களை ஊக்கமுள்ளவையாகச் செய்வது கடினமில்லை. வைடமின் நிறைந்த டால்டாவினால் சமையல் செய்வது ஒரு வழி. டால்டா இயற்கையாய் ஊக்கமளிக்கக் கூடிய சில முக்கிய வஸ்துக்களை அளிக்கிறது. மேலும் டால்டாவைக் காட்டிலும் உணவுகளுக்கு ருசி அளிக்கும் வஸ்து வேறே இடையாது. நீங்கள் உபயோகித்துப் பாருங்கள்.

## வைடமின் நிறைந்த டால்டா ஊக்கமளிக்கிறது.

HINDUSTAN VANASPATI MANUFACTURING CO. LTD.



# யுத்தத்திற்காகவும் சமாதானத்திற்காகவும் அதிகப்படியான சிக்கனங்கள்

பொருட்களை மிதமாகச் செலவிட்டு, அவை தாராளமாகக் கிடைக்கும்படிச் செய்யுங்கள்.

[illegible] அநேக சாமான்கள் கிடைப்பது அபூர்வமாய் இருக்கிறது. தேவைப் பொருட்கள் வரத்தில் பெரிய நெருக்கடி யிருக்கிறது. நீங்கள் உங்கள் உபயோகிப்பதில் பங்கீடு செய்து கொண்டாலொழிய ஏழைகள் அவைகளில் பங்கு பெற முடியாது. எல்லாவற்றையும் இயன்றவரை குறைவாக உபயோகிப்பது நாட்டுப் பற்றுடையவர்களின் கடமையாகும்.

சிக்கனமாக இருப்பது பண விஷயத்திலும் பிரயோஜனமானது. தினப்படி செய்யப்படும் சிறிய சிக்கனங்கள் மாதாந்திர சேமிப்பாகிறது. சமாதானம் ஏற்பட்டு விலைவாசிகள் குறைந்த சமயத்தில் செலவு செய்ய, அதிகப்படியான ரூபாய் உபரியாயிருக்கும்.






















## உங்களுக்கு இன்றியமையாதவை தவிர பிறவற்றை வாங்காதீர்கள்

இந்திய சர்க்கார் இ. & பி. இலாகா வெளியீடு. AAA 6




# இதை அளிப்பதிலேயே ஒரு அலாதி அந்தஸ்து

டிலக்ஸ் டெனர் சிகரெட்டை உங்கள் சிநேகிதர்கள் ரஸிப்பார்கள். 100% உத்தர வாதமுள்ள தூய வர்ஜீனியா புகையிலையி லிருந்துதான் டெனர்ஸ் தயாரானவை. டெனர் சிகரெட்டுகள் உங்களது ரஸிகத் தன்மைக்கு ஒரு அத்தாட்சி ஆகும். இவை களின் தனி மணம் இவைகளுக்கே உரித் தானது. மெல்லிய தொண்டை உடைய வர்கள் அனுபவிக்கக் கூடியது டெனர்தான்.

டி லக்ஸ் டெனர் சிகரெட்டு
ஜேம்ஸ் கார்ல்டன் லிட், லண்டன்

**tenor**

**is truly a de Luxe Cigarette**

JAMES CARLTON LTD. LONDON.

# மிதமிஞ்சி போஷிப்பது கெடுதலை விளைவிக்கும்



இது மிகவும் மெல்லிய தன்மை வாய்ந்த, அங்க அமைப்புள்ள குழந்தைகள் விஷயத்தில் மிகவும் பொருத்தமாகும்.

அளவுக்கு மீறி உணவு அளிப்பதாலும், வேளை தப்பிய வேளையில் உணவு கொடுத்தாலும் ஈரலுக்கு அதிக வேலை உண்டாகி சொற்ப காலத்தில் ஈரல் பெருக்கம் ஏற்பட காரணம் ஆகிறது. இந் நிலைமையை அறியாமல் நீடிக்க விட்டாலும், சரியான சிகிச்சை செய்யா விட்டாலும் அது அபாயகரமான நிலைமைக்குக் கொண்டுவிடும்.

**ஆரம்ப அறிகுறிகளை கவனிக்கவும்**



அடிக்கடி ஜுரம் ஏற்படுதல், மலச்சிக்கல், அதிக மலப்போக்கு, வாந்தி, பசியின்மை, வயறு பெருமல், பொதுவாக சோர்ந்திருத்தல், அடிக்கடி சிறுநீர் சிறுத்தல்.

**அபாயத்தை ஆரம்பத்திலேயே அகற்றுங்கள்**

வியாதி குறிகள் கண்ட உடனே ஜம்பியின் லிவர் க்யூர் கொடுங்கள். அப்படிச் செய்வது உங்கள் கவலையை நீக்கி பணச்செலவைக் குறைத்து, வியாதியை முற்ற விடாமல் செய்து பின் விட்டு ஏற்படக்கூடிய அபாயத்தை தவிர்க்கும்.

ஜம்மியின்
**லிவர்க்யூர்**
உபயோகியுங்கள்

குழந்தையின், ஈரல் குலைக்கட்டிக்கு ஜம்பியின் லிவர் க்யூர் உபயோகியுங்கள். எல்லா விடங்களிலும் விற்கப்படுகின்றன

ஜம்பி வெங்கிட்டராமையா & சன்ஸ்
மைலாபூர் — மதராஸ்.

கிராஞ்சுகள் — பம்பாய், கல்கத்தா, டில்லி, திருச்சிராப்பள்ளி, பெங்களூர், கும்பகோணம்.

# தி இந்தியன் பாங்க்
## லிமிடெட்.



தலைமை ஆபீஸ்:
"இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்"
வடக்கு பீச் ரோடு, மதராஸ்



லோகல் ஆபீஸ்கள்:

எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி
மவுண்டு ரோடு, மயிலாப்பூர்,
தியாகராய நகர், புரசவாக்கம்.

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும், பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.



வழங்கி வாக்களிக்கப்பட்ட
மூலதனம் ரூ. 60,00,000
செலுத்தப்பட்ட
மூலதனம் ரூ. 33,61,250
ரிஸர்வ் நிதி ரூ. 33,62,500
டெபாஸிட்டுகள் ரூ. 11½ கோடிக்கு அதிகம்



சகலவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும். மற்ற விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸுக்காவது எழுதி தெரிந்து கொள்ளலாம்.

N. கோபால அய்யர்
செக்ரடரி.

CIBOL. சைபால்

(ரிஜிஸ்டர்டு)

முகப்பரு, சேத்துப் புண், சிரங்கு, வேனல் கட்டி, தீப்பட்ட புண், கரப்பான் முதலியவைகளுக்கு கைகண்ட மருந்து



எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர்கள் :

**THE SOUTH INDIAN Mfg. Co., MADURA**

சென்னை நகர், ஆந்திர பிரதேசத்திற்கு ஏஜண்டுகள் :

ராஜன் ட்ரக் ஸ்டோர்ஸ்,

155, நைனியப்ப நாயக்கன் தெரு, பி. டி., மதராஸ்

---

கோடை காலத்திற்குத் தகுந்த - - -

- - - குளிர்ந்த பானங்கள்

கும்பகோணம் டி. எஸ். ஆர்.

கம்பெனியின்

குங்குமப்பூ, நன்னாரி, ரோஸ்

ஆரஞ்சு முதலிய சர்பத்துகள்

மதராஸ் ஸிடி ஏஜண்டுகள் :
புஷ்பவனம் ஸ்டோர்ஸ்,
திருவல்லிக்கேணி.

ஸ்டாக்கிஸ்டு :
B. பாலபட்டாபி,
வைசியாள் தெரு, கோயமுத்தூர்

Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.



னான். அதோடு, மாமல்லருக்குப் பாண்டிய ராஜ குமாரியை அப்போதே மணம் முடிக்காதது எவ்வளவு தவறு என்பதையும் அடிக்கடி எடுத்துக் காட்டினான். இந்தப் பேச்சு மாமல்லரின் காதில் நாராசமாக விழுந்தது.

நாளாக ஆக, மாமல்லருக்குச் சிவகாமியைப் பற்றி யாருடனாவது மனம் திறந்து பேசாவிட்டால் இருதயம் வெடித்து விடும்போலிருந்தது.

அப்படிப் பேசக் கூடியவர்கள் யார் இருக்கிறார்கள்? ஆயனர் ஒருவர் தான். அவர் தான் சிவகாமியைப் பற்றித் தாம் பேசுவதை ஒத்த உள்ளத்துடன் கேட்கக் கூடியவர். மேலும், அவருடைய உடல் நிலையைப் பற்றியும் தெரிந்து கொள்ள வேண்டுமல்லவா? பார்க்கப் போனால், தமக்கு மகேந்திரபல்லவர் எப்படியோ, அப்படியே ஆயனரும் தந்தைதானே? அதிலும் சிவகாமியைப் பிரிந்ததினால் தன்னைப் போலவே நரகவேதனை அனுபவித்துக் கொண்டிருக்கிறார் அல்லவா? அவரைக் கவனியாமலிருப்பது எவ்வளவு பிசகு?

இவ்விதம் எண்ணி, ஒரு நாள் மாமல்லர் ஆயனரை அவருடைய அரண்ய வீட்டில் பார்ப்பதற்காகத் தன்னந் தனியே குதிரை மீதேறிப் பிரயாணமானார்.

காட்டு வழியாகப் போய்க்கொண்டிருக்கையில், அவருக்குத் தாமரைக்